ஸ்ரீ

பின்பழகியபெருமாள்சீயர்

அருளிச் செய்த

# ஆறாயிரப்படி

# குருபரம்பராப்ரபாவம்.

## குருபரம்பராவிவரண மென்கிற

அருமையான கிரந்தத்துடன்

சே. கிருஷ்ணமாசாரியர் பதிப்பு

விலை ரூ. 2—8—0.



திருவல்லிக்கேணி

கோயில் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றது.

1927

# விஷயசூசிகை.

## குருபரம்பராப்ரபாவம்.



திவ்யப்ரபந்த ப்ரமாண்ய ஸமர்த்தகம்.



குருபரம்பரா விவரணம்.

# க்ரந்தாக்ஷரங்கள்.

𑌅 𑌆 𑌇 𑌈 𑌉 𑌊 𑌋 𑍠 𑌏 𑌐 𑌓 𑌔 𑌅𑌂 𑌅𑌃

𑌕 𑌖 𑌗 𑌘 𑌙 𑌚 𑌛 𑌜 𑌝 𑌞 𑌟 𑌠 𑌡 𑌢 𑌣 𑌤 𑌥 𑌦 𑌧 𑌨

𑌪 𑌫 𑌬 𑌭 𑌮 𑌯 𑌰 𑌲 𑌵 𑌶 𑌷 𑌸 𑌹 𑌳 𑌕𑍍𑌷

𑌕 𑌕𑌾 𑌕𑌿 𑌕𑍀 𑌕𑍁 𑌕𑍂 𑌕𑍃 𑌕𑍄 𑌕𑍇 𑌕𑍈 𑌕𑍋 𑌕𑍌 𑌕𑌂 𑌕𑌃

◌𑌿 ◌𑌾 ◌𑍁 ◌𑍃 ◌𑍄 𑍇𑍇

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# குருபரம்பராப்ரபாவத் தனியன்கள்.

---

### ஸ்ரீ நம்பெருமா ளருளிச்செய்தது.

ஸ்ரீஶைலேஶதயாபாத்ரம் தீ⁴ப⁴க்த்யாதி³கு³ணார்ணவம் |
யதீந்த்³ரப்ரவணம் வந்தே³ ரம்யஜாமாதரம் முநிம் ||

ஸ்ரீ சைலேசதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம் -
யதீந்த்ரப்ரவணம்வந்தே ரம்யஜாமாதரம்முநிம்.

### ஸ்ரீ கூரத்தாழ்வா னருளிச்செய்தது.

லக்ஷ்மீநாத²ஸமாரம்பா⁴ம் நாத²யாமுநமத்⁴யமாம் |
அஸ்மதா³சார்யபர்யந்தாம் வந்தே³ கு³ருபரம்பராம் ||

லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம் -
அஸ்மதாசார்யபர்யந்தாம் வந்தேகுருபரம்பராம்.

யோ நித்யமச்யுதபதா³ம்பு³ஜயுக்³மருக்ம
வ்யாமோஹதஸ் ததி³தராணி த்ருணாய மேநே |
அஸ்மத்³கு³ரோர் ப⁴க³வதோஸ்ய த³யைகஸிந்தோ⁴:
ராமாநுஜஸ்ய சரணௌ ஶரணம் ப்ரபத்³யே ||

யோநித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ்ததிதராணித்ருணாயமேநே -
அஸ்மத்குரோர்பகவதோஸ்யதயைகஸிந்தோ:
ராமாநுஜஸ்யசரணௌசரணம்ப்ரபத்யே.

ஸ்ரீயாளவந்தாரருளிச்செய்தது.

மாதா பிதா யுவதயஸ் தநயா விபூதிஸ்
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம் ।
ஆத்யஸ்ய நঃ குலபதேர் வகுளாபிராமம்
ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா ॥

மாதாபிதாயுவதயஸ்தநயாவிபூதிஸ்
ஸர்வம்யதேவநியமேநமதந்வயாநாம் -
ஆத்யஸ்யநঃகுலபதேர்வகுளாபிராமம்
ஸ்ரீமத்ததங்க்ரியுகளம்ப்ரணமாமிமூர்த்நா.

ஸ்ரீதிருக்குருகைப்பிரான் பிள்ளானருளிச்செய்தது.

பூதம் ஸரஶ்ச மஹதாஹ்வய பட்டநாத
ஸ்ரீபக்திஸார குலஶேகர யோகிவாஹாந் ।
பக்தாங்க்ரிரேணு பரகால யதீந்த்ர மிஶ்ராந்
ஸ்ரீமத் பராங்குஶ முநிம் ப்ரணதோஸ்மி நித்யம் ॥

பூதம்†ஸரஶ்சமஹதாஹ்வயபட்டநாத
ஸ்ரீபக்திஸாரகுலஶேகரயோகிவாஹாந் -
பக்தாங்க்ரிரேணுபரகாலயதீந்த்ரமிஶ்ராந்
ஸ்ரீமத்பராங்குஶமுநிம்ப்ரணதோஸ்மிநித்யம்.

நாதம் பங்கஜநேத்ர ராம யமுநா பூர்ணஸ்வமாலாதராந்
யோகீந்த்ரம் குருகேஶ சந்த்ர ஜலதிம் கோவிந்த கூராதிபௌ ।
பட்டார்யம் முநிமார்த்த யோகிஜாமாத்ரார்யௌ லக்ஷ்மணத்வயௌ
வந்தே மாதவ பத்மநாப மஹகோலேஶ தேவாதிபாந் ॥

நாதம்பங்கஜநேத்ரராமயமுநாபூர்ணஸ்வமாலாதராந்
யோகீந்த்ரம்குருகேஶசந்த்ரஜலதிம்கோவிந்தகூராதிபௌ -
பட்டார்யம்முநிமார்த்தயோகிஜாமாத்ரார்யௌலக்ஷ்மணத்வயௌ
வந்தேமாதவபத்மநாபமஹகோலேஶதேவாதிபாந்.

---

† ஸரஸ்ய என்றும் பாடம்.

𑌨𑌮𑍋 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌵𑍇𑌦𑍍𑌯𑌾𑌯 𑌜𑌗𑌨𑍍𑌮𑌙𑍍𑌗𑌲𑌹𑍇𑌤𑌵𑍇 ।
𑌯𑌸𑍍𑌯𑌾𑌮𑍃𑌤𑌾𑌸𑌾𑌰 𑌪𑍂𑌰𑌿𑌤𑌂 𑌭𑍁𑌵𑌨𑌤𑍍𑌰𑌯𑌮𑍍 ॥

நமோவேதாந்தவேத்யாய ஜகந்மங்களஹேதவே -
யஸ்யாம்ருதாஸார பூரிதம்புவநத்ரயம்.

𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌵𑍇𑌦𑍍𑌯𑌾 𑌮𑍃𑌤𑌵𑌾𑌰𑌿𑌰𑌾𑌶𑍇𑌃
𑌵𑍇𑌦𑌾𑌰𑍍𑌥𑌸𑌾𑌰𑌾 𑌮𑍃𑌤𑌪𑍂𑌰𑌮𑌗𑍍𑌰𑍍𑌯𑌮𑍍 ।
𑌆𑌦𑌾𑌯𑌵𑌰𑍍𑌷𑌨𑍍𑌤𑌮𑌹𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇
𑌕𑌾𑌰𑍁𑌣𑍍𑌯𑌪𑍂𑌰𑍍𑌣𑌂 𑌕𑌲𑌿𑌵𑍈𑌰𑌿𑌦𑌾𑌸𑌮𑍍 ॥

வேதாந்தவேத்யாம்ருதவாரிராஸே:
வேதார்த்தஸாராம்ருதபூரமக்ர்யம் -
ஆதாயவர்ஷந்தமஹம்ப்ரபத்யே
காருண்யபூர்ணம்கலிவைரிதாஸம்.

𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌕𑍃𑌷𑍍𑌣𑌸𑌮𑌾𑌹𑍍𑌵𑌾𑌯 𑌨𑌮𑍋𑌯𑌾𑌮𑍁𑌨𑌸𑍂𑌨𑌵𑍇 ।
𑌯𑌤𑍍𑌕𑌟𑌾𑌕𑍍𑌷𑍈𑌕𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌣𑌾𑌂 𑌸𑍁𑌲𑌭𑌃𑌶𑍍𑌰𑍀𑌧𑌰𑌃𑌸𑌦𑌾 ॥

𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌪𑌾𑌦𑌪𑌾𑌦𑌾𑌬𑍍𑌜𑍇 𑌨𑌮𑌾𑌮𑌿𑌶𑌿𑌰𑌸𑌾𑌸𑌦𑌾 ।
𑌯𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌪𑍍𑌰𑌭𑌾𑌵𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌰𑌭𑍂𑌨𑍍𑌮𑌮 ॥

ஸ்ரீமத்க்ருஷ்ணஸமாஹ்வாய நமோயாமுநஸூநவே -
யத்கடாக்ஷைகலக்ஷ்யாணாம் ஸுலபஸ்ஸ்ரீதரஸ்ஸதா.
ஸ்ரீக்ருஷ்ணபாதபாதாப்ஜே நமாமிஸிரஸாஸதா -
யத்ப்ரஸாதப்ரபாவேந ஸர்வஸித்திரபூந்மம.

𑌲𑍋𑌕𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌗𑍁𑌰𑌵𑍇 𑌕𑍃𑌷𑍍𑌣𑌪𑌾𑌦𑌸𑍍𑌯𑌸𑍂𑌨𑌵𑍇 ।
𑌸𑌂𑌸𑌾𑌰𑌭𑍋𑌗𑌿𑌸𑌨𑍍𑌦𑌷𑍍𑌟𑌜𑍀𑌵𑌜𑍀𑌵𑌾𑌤𑌵𑍇𑌨𑌮𑌃 ॥

லோகாசார்யகுரவே க்ருஷ்ணபாதஸ்யஸூநவே -
ஸம்ஸாரபோகிஸந்தஷ்ட ஜீவஜீவாதவேநம:.

𑌨𑌮𑌃𑌶𑍍𑌰𑍀𑌶𑍈𑌲𑌨𑌾𑌥𑌾𑌯 𑌕𑍁𑌨𑍍𑌤𑍀𑌨𑌗𑌰𑌜𑌨𑍍𑌮𑌨𑍇 ।
𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌲𑌬𑍍𑌧𑌪𑌰𑌮𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌕𑍈𑌙𑍍𑌕𑌰𑍍𑌯𑌶𑌾𑌲𑌿𑌨𑍇 ॥

ஸ்ரீ

பின்பழகராம்பெருமாள்ஜீயர் †

அருளிச்செய்த

# குருபரம்பரா ப்ரபாவம்.

## ப்ரவேஶம்.

ஸ்ரீபதியாய், ஸ்ரீவைகுண்டநிகேதநனாய், ஸ்ரீமதநந்தமுகநித்ய ஸூரிபரிஷந்நிஷேவ்யமாணனாய், அவாப்தஸமஸ்தகாமனாய், அகில மங்கள குணஸ்வரூபனான ஸர்வேஶ்வரன், (௧) "க்ஷயந்தமஸ்ய ரஜஸ꞉ பராகே" என்றும், (௨) "த்ரிபாதஸ்யாம்ருதந்திவி" என்றும், (௩) "ததக்ஷரேபரமேவ்யோமந்" என்றும், (௪) "யோ அஸ்யாத்யக்ஷ꞉பரமேவ்யோமந்" என்றும், (௫) "தத்விஷ்ணோ꞉பரமம்பதம் ஸதா பஶ்யந்தி ஸூரய꞉" என்றும் ஸகலஜகத்ஹிதாநுஶாஸநமாக ப்ரவ்ருத்தங்களான நிகிலநிகமாந்தஸஹஸ்ரங்களிலும்; (௬) "வைகுண்டே து பரே லோகே ஸ்ரியாஸார்த்தஞ்ஜகத்பதி꞉ - ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர்ப்பாகவதைஸ்ஸஹ" என்றும், (௭) "வைகுண்டே து பரே லோகே ஸ்ரீஸஹாயோ ஜநார்த்தந꞉ - உபாப்யாம் பூமிநீளாப்யாம் ஸேவித꞉ பரமேஶ்வர꞉" என்றும், (௮) "அத்யர்க்காநலதீப்தந்தத் ஸ்தாநம் விஷ்ணோர்மஹாத்மந꞉ - ஸ்வயைவப்ரபயா ராஜந் துஷ்ப்ரேக்ஷந்தேவ

---

(௧) "𑌕𑍍𑌷𑌯𑌨𑍍𑌤𑌮𑌸𑍍𑌯 𑌰𑌜𑌸𑌃 𑌪𑌰𑌾𑌕𑍇" (௨) "𑌤𑍍𑌰𑌿𑌪𑌾𑌦𑌸𑍍𑌯𑌾𑌮𑍃𑌤𑌂 𑌦𑌿𑌵𑌿" (௩) "𑌤𑌦𑌕𑍍𑌷𑌰𑍇 𑌪𑌰𑌮𑍇 𑌵𑍍𑌯𑍋𑌮𑌨𑍍" (௪) "𑌯𑍋 𑌅𑌸𑍍𑌯𑌾𑌧𑍍𑌯𑌕𑍍𑌷𑌃 𑌪𑌰𑌮𑍇 𑌵𑍍𑌯𑍋𑌮𑌨𑍍" (௫) "𑌤𑌦𑍍𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 𑌪𑌰𑌮𑌂 𑌪𑌦𑌂 𑌸𑌦𑌾 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌸𑍂𑌰𑌯𑌃" (௬) "𑌵𑍈𑌕𑍁𑌣𑍍𑌠𑍇 𑌤𑍁 𑌪𑌰𑍇 𑌲𑍋𑌕𑍇 𑌶𑍍𑌰𑌿𑌯𑌾 𑌸𑌾𑌰𑍍𑌧𑌂 𑌜𑌗𑌤𑍍𑌪𑌤𑌿𑌃 । 𑌆𑌸𑍍𑌤𑍇 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌭𑌕𑍍𑌤𑍈𑌰𑍍𑌭𑌾𑌗𑌵𑌤𑍈𑌃 𑌸𑌹 ॥" (௭) "𑌵𑍈𑌕𑍁𑌣𑍍𑌠𑍇 𑌤𑍁 𑌪𑌰𑍇 𑌲𑍋𑌕𑍇 𑌶𑍍𑌰𑍀𑌸𑌹𑌾𑌯𑍋 𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨𑌃 । 𑌉𑌭𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌭𑍂𑌮𑌿𑌨𑍀𑌲𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌸𑍇𑌵𑌿𑌤𑌃 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 ॥" (௮) "𑌅𑌤𑍍𑌯𑌰𑍍𑌕𑌾𑌨𑌲𑌦𑍀𑌪𑍍𑌤𑌂 𑌤𑌤𑍍𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌰𑍍𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 । 𑌸𑍍𑌵𑌯𑍈𑌵 𑌪𑍍𑌰𑌭𑌯𑌾 𑌰𑌾𑌜𑌨𑍍 𑌦𑍁𑌷𑍍𑌪𑍍𑌰𑍇𑌕𑍍𑌷𑌂 𑌦𑍇𑌵𑌦𑌾𑌨𑌵𑍈𑌃 ॥"

† 'பின்பழகிய பெருமாள் ஜீயர்' என்றும் வழங்குவர்.

நாகவை:" என்றும், (க) "ஆக்ரீடாவிசிதாராஜக் பத்மிக்யப்சாமலோ தகா: - ஏதேவைகிபாஸ்தாத ஸ்தாசஸ்யபரமாத்மக:" என்றும், (உ) "காலம்ஸபசதேயத்ர நகாலஸ்தத்ரவைப்ரபு:" என்றும், (ங) "கலாமுஹூர்த்தாதிமயச்சகாலோநயத்விபூதே:பரிணாமஹேது:" என்றும், (ச) "அண்டகோசாத்ஸாவரணாத் அமுஷ்மாத்பரதப்ரபோ - ஸ்திதோஹ்யம்பரமேவ்யோமக்யப்ராக்ருதஸரீரவாக்" என்றும், (ரு) "யத்தத்புராணமாகாஸம் ஸர்வஸ்மாத்பரமத்ருவம் - யத்பதம்ப்ராப்யதத்வஜ்ஞா: முச்யர்தேஸர்வகில்பிஷை:" என்றும், (சு) "அண்டேப்ய: பரதோசித்யம் த்ரிபாதேஷவிராஜதே - இதரேண துபாதேந ப்ராக்ருதேஷ்வண்டேஷுவிராஜதே" என்றும், இத்யாதியான யோகயாஜ்ஞவல்க்ய பஞ்சமவேத புராணாந்த ஸமுதஞ்சித ப்ராமாண்ய பாஞ்சராத்ராதி வசநஸஞ்சயங்களிலும், *மயர்வறமதிநலமருளப்பெற்ற ஆழ்வார்களாலே "நலமந்தமில்லதோர்நாடு" என்றும், "சுடரொளியாய் நின்ற தன்னுடைச்சோதி" என்றும், "தெளிவிசும்புதிருநாடு" என்றும், "மாகவைகுந்தம்" என்றும், "தெளிதாகிய சேண்விசும்பு" என்றும் இத்யாதி வாக்யசதங்களிலும் அறுதியிடப்பட்ட அளவிறந்த ஏற்றத்தையுடைத்தாய், (எ) "குணை:ப்ராகம்புருஷ:பரம்பதம் பராத்பரம் ப்ரஹ்மசதேவிபூதய:" என்றும், (அ) "பரமயோகிவாங்மநஸாபரிச்சேத்யஸ்வரூபஸ்வபாவ" என்றுதொடங்கி (கூ) "நிரதிசயவைகுண்டநாத" என்றும், (க0) "காலாதிகதவபராமஹதீவிபூதி:" என்றும்,

---

(க) [illegible] (உ) [illegible] (ங) [illegible] (ச) [illegible] (ரு) [illegible] (சு) [illegible] (எ) [illegible] (அ) [illegible] (கூ) [illegible] (க0) [illegible]

(க) "நதத்ரஸூர்யோபாதி நசந்த்ரதாரகம்நேமாவித்யுதோபாந்திகு தோऽயமக்நி:-தமேவபாந்தமநுபாதிஸர்வம் தஸ்யபாஸாஸர்வமிதம்விபாதி" என்றும்(உ) "திவிஸூர்யஸஹஸ்ரஸ்யபவேத்யுகபதுத்திதா-யதிபாஸ்ஸத்ருஶீஸாஸ்யாத்பாஸஸ்தஸ்ய மஹாத்மந:" என்றும், (ங) "ஸ்ரக்வஸ்த்ராபரணைர்யுக்தம்ஸ்வாநுரூபைரநுபமை:-சின்மயைஸ்ஸ்வப்ரகாசைஶ்சாந்யோந்யருசிரஞ்ஜிதை:" என்றும், "சுழிபட்டோடுஞ் சுடர்ச்சோதி வெள்ளம்" என்றும், "சோதிவெள்ளத்தினுள்ளே எழுவதோருரு" என்றும் சொல்லுகிறபடியே நிரவதிகதேஜோரூபமாய் ஸுகைகரூபமாய் நித்யஸித்தபரமேஷ்ட்யாதி பஞ்சோபநிஷந்மயமாய் ஸ்வாநுரூபமாய்ச் சின்மயமாய் விளங்குகிற கிரீடாதிநூபுராந்தமான திவ்யஸ்ரக்வஸ்த்ராபரணபூஷிதனாய், ஆபரணகோடியிலும் ஆயுதகோடியிலும்மெய்க்காட்டுகிற திவ்யாயுதங்களாலே தீப்யமானனாய், நிரதிஶயஸௌந்தர்யஸௌகந்த்ய ஸௌகுமார்ய லாவண்யயௌவநாத்யபரிமிதோதாரகுணகணநிதியான திவ்யமங்களவிக்ரஹவிஶிஷ்டனாய், இவ்வடிவழகடங்கக்காட்டிஎரித்தநிலாவாகாமே(ச) "ப்ருஹச்சரீரோऽபிமிதாபதேஹோயுவாகுமாரத்வமுபேயிவாந்ஹரி:- ரேமேஶ்ரியாஸௌஜகதாஞ்ஜநந்யாஸஜ்யோத்ஸ்நயாசந்த்ர இவாம்ருதாம்ஶு:" என்றும் "உடனமர்காதல்மகளிர் திருமகள்மண்மகளாயர்மடமகள்" என்றும் சொல்லுகிறபடியே இரண்டட்டத்திலுமிருந்து அநுபவிக்கிற * நந்தல்மலர்மங்கைக்கும் மண்மடந்தைக்கும் குலவாயர்கொழுந்துக்கும் கேள்வனாய்க்கொண்டு ஸ்ரீபூமிநீளைகளோடே வீற்றிருந்து; இப்படி * கண்ணன்விண்ணூராகிய * வைகுந்தமாநகரிலே திவ்யபோகம்நடவாநிற்க; அச்சேர்த்தியழகைத் தலைசேர்ப்பாட்டிலே கண்டநுபவித்துநிர்ப்பரஸ்துதிபண்ணி (ரு) "நம:" என்பது (சு) "ஜிதம்" என்பது "பல்லாண்டு"

---

(க) "न तत्र सूर्यो भाति न चन्द्रतारकं नेमा विद्युतो भान्ति कुतोऽयमग्निः । तमेव भान्तमनुभाति सर्वं तस्य भासा सर्वमिदं विभाति" (உ) "दिवि सूर्यसहस्रस्य भवेद्युगपदुत्थिता । यदि भाः सदृशी सा स्याद्भासस्तस्य महात्मनः" (ங) "स्रग्वस्त्राभरणैर्युक्तं स्वानुरूपैरनुपमैः । चिन्मयैः स्वप्रकाशैश्च अन्योन्यरुचिरञ्जितैः" (ச) "बृहच्छरीरोऽपि मिताभदेहो युवा कुमारत्वमुपेयिवान् हरिः । रेमे श्रिया स जगतां जनन्या सज्योत्स्नया चन्द्र इवामृतांशुः" (ரு) "नमः" (சு) "जितं"

என்பதாய் அக்ரமமாகப்*பிணங்கியமரர்பிதற்றுமதுகண்டு, "ஆக்கா ரவாரமதுகேட்டழலுமிழும் பூங்காரரவணை" என்கிறபடியே அஸ்தாநரக்ஷாவ்யஸநிகளாய், நாஸ்யத்ருஷ்ணுகலிதபரிகராராய், (க) "ஸூரிபோசித்பஸம்வஸித்தால் ஸர்வதாஸர்வதர்சிநஃ" என்கிறபடியே * முடிபுடைவானவரான * அபர்வறுமமரர்களாலும், (உ) "ஸூர்யகோடிப்ரதீகாஸாஃ பூர்ணேந்த்வயுதஸந்நிபாஃ - யஸ்மிந்ப்ரதேஸேராஜந்தே முக்தாஸ்ஸம்ஸாரபந்தநாத" என்னும்படி * கரைகண்டோராய் அநந்த வைநதேயாதிவத் அத்யந்தரங்கரான அநந்தமுக்தப்ருந்தங்களாலும் அவரதபரிசர்யமாணசரண நளிநனைக்கொண்டு, (ங) "ராஜாதிராஜஸ்ஸர்வேஷாம் விஷ்ணுர்ப்ரஹ்மமயோமஹாந் - ஈஸ்வரந் தம விஜாநீமஸ்ஸஸம்புஸ் ஸப்ரஜாபதிஃ" என்கிறவேண்டற்பாடு தோன்ற "ஏழுலகுந்தனிக்கோல்செல்ல - வீற்றிருந்து" என்றும், "பொங்கோதஞ்சூழ்ந்த புவனியும் விண்ணுலகும், அங்காதுஞ் சோராமேயாள்கின்ற செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார்" என்றும் சொல்லுகிறபடியே உபயவிபூதிநிர்வாஹகனாய், "கண்டவாற்றால் தனதேயுலகென நின்றான்" என்கிறபடியே கண்டகாட்சியிலேதான உபயவிபூதி நிர்வாஹகனானமை தோற்ற எழுந்தருளியிருந்து; (ச) "ஸ்வேதரஸமஸ்தவஸ்து விலக்ஷணாநந்தஜ்ஞாநைகஸ்வரூப" என்கிறபடியே தானும் நிரதிஸயாநந்தயுக்தனாய், "அபர்வறுமமரர்கள்" என்கிறபடியே நித்யாஸங்குசித ஜ்ஞாநாயிருக்குமவர்கள் அநந்தகருட விஷ்வக்ஸேநப்ரமுகரான நித்யஸூரிகளையும், "இயக்கெலாமறுத்து" என்கிறபடியே நிவ்ருத்தஸம்ஸாரருமாய் அஸங்குசிதஜ்ஞாநருமாய் அந்த நித்யஸூரிகளோபாதி-லப்தகைங்கர்யருமான முக்தரையும் "அந்தமில்பேரின்பத்து அடியர்" என்னும்படி ஆநந்திப்பித்துக்கொண்டு போராநிற்க; 'இவர்களோபாதி ஸம்ஸாரிகளும் நம்மையநுபவித்து அநுபவஜநிதப்ரீதிகாரித ஸேஷாவஸ்தோசித ஸேஷாஸேஷைகரதிரூப நித்ய நிரவத்ய நிரதிஸயாநந்தரூபமக்கைங்கர்யமாகிற மஹாஸம்பத்தைப் பெற்று வாழுகைக்கு ப்ராப்தியுண்டாயிருக்க, இவர்கள் இத்தை யிழந்திருப்

---

(க) "[illegible]"
(உ) "[illegible]" (ங) "[illegible]" (ச) "[illegible]"

பதே!' என்று மிகவும் வ்யாகுலாந்தக்கரணனாய், அங்குத்தை யநுபவங்களொன்றும் உண்டறுக்காட்டாதே (௧) "ஸ ஏகாகீ ந ரமேத" என்கிறபடியே அவன் தனியனைப்போலே போரநொந்து, இவர்கள் கரணகளேபரசூந்யராய் (௨) "லூநபக்ஷ இவாண்டஜ:" என்கிறபடியே இறகொடிந்த பக்ஷிபோலே யிருக்கிறபடியைக் கண்டு, (௩) "கரணகளேபரைர்கடயிதுந்தயமாநமநா:" என்றும், "பல்லுயிர்க்குமாக்கை கொடுத்தளித்தகோனே" என்றுஞ் சொல்லுகிறபடியே பரமதயாளுவாய்க்கொண்டு அகிலாத்மாக்களுக்கும் கரணகளேபர ப்ரதாநம்பண்ணியருள; இவர்களும் (௪) "விசித்ராதேஹஸம்பத்திரீஶ்வராயநிவேதிதும் - பூர்வமேவ க்ருதா ப்ரஹ்மந்ஹஸ்தபாதாதிஸம்யுதா" என்றும், "நாடாதமலர்நாடி நாடோறும் நாரணன்றன், வாடாதமலரடிக்கீழ் வைக்கவே வகுக்கின்று" என்றும், "மாயவன்றன்னை வணங்கவைத்த கரணமிவை" என்றும், "தேனேய்மலருந்திருப்பாதம்" என்றும், "துயரறுசுடரடி" என்றும் சொல்லுகிறபடியே ஸ்வசரண கமலஸமாஶ்ரயணத்துக்கு உறுப்பாகக்கொடுத்த கரசரணாத்யவயவஸங்காதாத்மகமான சரீரத்தைக்கொண்டு அவன் நினைவின்படிசெய்யாதே, ஸமித்தைத்தறிக்கக்கொடுத்த கத்தியைக்கொண்டு பசுவின்வாலைத் தறிப்பாரைப்போலேயும் களையெடுக்கக்கொடுத்த கோலைக்கொண்டு கண்ணைக் கலக்கிக்கொள்வாரைப்போலேயும் ஆறுநீந்தக்கொடுத்த தெப்பத்தைக்கொண்டு அக்கரைபேறலாயிருக்க அதுசெய்யாதே நீர்வாக்காலேபோ மூழ்கிக் கடலிலேபுகுவாரைப்போலேயும் * ஆக்கையின்வழி யுழன்று ஶப்தாதி விஷயப்ராவண்யத்துக்கு உறுப்பாக்கிக் கர்மப்ரவாஹத்தாலே * பிறவியென்னும் பெருங்கடலிலே, புக்கு அனர்த்தப்படுகிறபடியைக் கண்டு; நல்வழிகண்டு நடக்கைக்கு உடலாக (௫) "ஶாஸநாச்சாஸ்த்ரம்" என்றும், (௬) "ஹர்த்தும்தமஸ்ஸதஸதீச விவேக்துமீஶோ மாநம்ப்ரதீபமிவகாருணிகோததாதி" என்றும், "கலைகளும் வேதமும்நீதிநூலும் கற்பமுஞ் சொற்பொருள் தானும்மற்றை, நிலைகளும் வானவர்க்கும்பிறர்க்கும் நீர்மையினாலருள்செய்து" என்றும், "தொ

---

(௧) "𑌸 𑌏𑌕𑌾𑌕𑍀 𑌨 𑌰𑌮𑍇𑌤" (௨) "𑌲𑍂𑌨𑌪𑌕𑍍𑌷 𑌇𑌵𑌾𑌣𑍍𑌡𑌜𑌃" (௩) "𑌕𑌰𑌣𑌕𑌲𑍇𑌬𑌰𑍈𑌰𑍍𑌘𑌟𑌯𑌿𑌤𑍁𑌂 𑌦𑌯𑌮𑌾𑌨𑌮𑌨𑌾𑌃" (௪) "𑌵𑌿𑌚𑌿𑌤𑍍𑌰𑌾 𑌦𑍇𑌹𑌸𑌮𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌰𑍀𑌶𑍍𑌵𑌰𑌾𑌯 𑌨𑌿𑌵𑍇𑌦𑌿𑌤𑍁𑌮𑍍 । 𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑍇𑌵 𑌕𑍃𑌤𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑍍 𑌹𑌸𑍍𑌤𑌪𑌾𑌦𑌾𑌦𑌿𑌸𑌂𑌯𑍁𑌤𑌾" (௫) "𑌶𑌾𑌸𑌨𑌾𑌚𑍍𑌛𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌮𑍍" (௬) "𑌹𑌰𑍍𑌤𑍁𑌂 𑌤𑌮𑌸𑍍𑌸𑌦𑌸𑌤𑍀 𑌚 𑌵𑌿𑌵𑍇𑌕𑍍𑌤𑍁𑌮𑍀𑌶𑍋 𑌮𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌦𑍀𑌪𑌮𑌿𑌵 𑌕𑌾𑌰𑍁𑌣𑌿𑌕𑍋 𑌦𑌦𑌾𑌤𑌿"

ண்டேசெய்தென்றுக்கொழுது வழிவொழுகப், பண்டேபரமன்பணித்த பணிவகை" என்றுஞ் சொல்லுகிறபடியே தன்க்ருபையாலே சாஸ்த்ரப்ரதாநம் பண்ணினவிடத்திலும்; அதன்படிசெய்யாதே (க) "ஈஸ்வரோஹமஹம்போகீ ஸித்தோஹம்பலவாந்ஸுகீ - ஆட்யோஅபிஜநவாநஸ்மிகோந்யோஸ்திஸத்ருஸோமயா" என்றும், (உ) "யோந்யதாஸந்தமாத்மாநமந்யதாப்ரதிபத்யதே - கிம்தேநநக்ருதம்பாபம் சோரேணாத்மாபஹாரிணா" என்றும், "கொல்வன முதலாவல்லன முயலும்" என்றும் சொல்லுகிறபடியே அஞலபாபஙோதுவாய் ஸ்வஸ்வாதந்த்ர்யரூபமான ஆத்மாபஹாரத்தைப்பண்ணி அநாதிகர்மவஸாத்தோஷதூஷிதாந்தக்கரணராய் அபதேப்ரவ்ருத்தராயிருக்கிறபடியைக்கண்டு; ஓலைப்புறத்தைச்செல்லாதவரட்டைஎடுத்துவிட்டுக குறும்பறுக்கும் ராஜாக்களைப்போலே ஸர்வேஸ்வரனும் 'நாமேபோய் இவர்களைவாரிப் பிடியாகப்பிடித்துக்கொண்டு வரவேணும்' என்று ராமக்ருஷ்ணத்யவதாரமாக அவதரித்துப் * படாதனபட்டுத் திருத்தப்பார்த்தவிடத்திலும்; (ங) "ஆஸுரீம்யோநிமாபந்நா மூடாஜந்மநிஜந்மநி -மாமப்ராப்யைவகௌந்தேய ததோயாந்த்யதமாங்கதிம்" என்றும், (ச) "அவஜாநந்திமாம்மூடா மாநுஷீந்தநுமாஸ்ரிதம் - பரம்பாவமஜாநந்தோ மமபூதமஹேஸ்வரம்" என்றும் சொல்லுகிறபடியே ஸஜாதீயப்ரதிபத்தியாலே அவஜ்ஞைபண்ணி எதிரம்புகோப்பாராய்ப் * பலபல நாழஞ்சொல்லிக் * கேட்பார்செவிசுடுகீழ்மை வசவுகளேவைது * வல்லவாபழித்து வாக்தருக்தங்கள் பண்ணுவாராய் ஆஸுரப்ரக்ருதிகளாய்த் தன்னைவந்து கிட்டாமையன்றிக்கே (ரு) "அஸம்மே" என்று எதிரிட்டுக்கொண்டு அதமமானகதிகளிலே விழுகிறபடியைக் கண்டு, * மனிசரும் மற்றும் முற்றுமாய்மாயப்பிறவிபிறந்த தனியனுகையாலே விஸஜாதீயரான சக்ரு இதுவைத்தமன்றென்று பார்த்து, பார்வைவைத்து ம்ருகம்பிடிப்பாரைப்போலே மநுஷ்ய ஸஜாதீயரான

---

(க) "ஈஸ்வரோஹமஹம் போகீ ஸித்தோஹம் பலவாந்ஸுகீ | ஆட்யோபிஜநவாநஸ்மி கோந்யோஸ்தி ஸத்ருஸோ மயா" (உ) "யோந்யதா ஸந்தமாத்மாநமந்யதா ப்ரதிபத்யதே | கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா" (ங) "ஆஸுரீம் யோநிமாபந்நா மூடா ஜந்மநி ஜந்மநி | மாமப்ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்யதமாம் கதிம்" (ச) "அவஜாநந்தி மாம் மூடா மாநுஷீம் தநுமாஸ்ரிதம் | பரம் பாவமஜாநந்தோ மம பூதமஹேஸ்வரம்" (ரு) "அஸம்மே"

ஆழ்வார்களைப்பிடித்து ஜகத்தைத் திருத்தியருளவேணுமென்று பார்த்தருளி, ஸ்ரீவத்ஸ கௌஸ்துப வைஜயந்தீ வநமாலைகளையும், ஸ்ரீ பூமி நீளைகளையும், ஸ்ரீ பஞ்சாயுதாழ்வார்களையும், அநந்தகருடவிஷ்வக்ஸேநப்ரப்ருதிகளையும் பார்த்து, 'நீங்கள்போய் லீலாவிபூதியிலே நாநா வர்ணங்களிலும் அவதரித்து, அகிலாத்மோத்தாரணம்பண்ணுங்கோள்' என்று நியமித்தருள, அவர்களும் (க) "கலௌ கலு பவிஷ்யந்தி நாராயணபராயணா: - க்வசித்க்வசிந்மஹாபாகா த்ரமிடேஷு ச பூரிஶ:" என்றும், (உ) "தாம்ரபர்ணீ நதீ யத்ர க்ருதமாலா பயஸ்விநீ - காவேரீ ச மஹாபாகா ப்ரதீசீ ச மஹாநதீ" என்றும்சொல்லுகிறபடியே இந்நதிகளின் ஸமீபங்களான த்ரமிடபூபாகத்திலே நிமக்நரை உயர்த்த நாநா வர்ணங்களிலே வந்தவதரிக்க, ஸர்வேஶ்வரனும் அவர்களுக்கு * மயர்வறமதிநலமருளி, அவர்கள்முகேந ஸர்வாதிகாரமான த்ராவிடவேதரூப திவ்யப்ரபந்தங்களை ப்ரகாஶிப்பித்தருளினான்.

எங்ஙனேயெனில்:—

ப்ரவேஶம் முற்றிற்று.

---

(க) "கலௌ கலு பவிஷ்யந்தி நாராயணபராயணா: | க்வசித் க்வசிந் மஹாபாகா த்ரமிடேஷு ச பூரிஶ:" (உ) "தாம்ரபர்ணீ நதீ யத்ர க்ருதமாலா பயஸ்விநீ | காவேரீ ச மஹாபாகா ப்ரதீசீ ச மஹாநதீ"

# பொய்கையாழ்வார் வைபவம்.

(௧) "காஞ்ச்யாம்ஸரஸிஹேமாப்ஜே ஜாதம்காஸாரயோகிநம் -
கலயேயஶ்ஶ்ரிய:பத்யே ரவிம்தீபமகல்பயத்".

(௨) "ம்ருகுந்தஸ்யமுகோல்லாஸஸமூலவாக்ஜாலமூர்ச்சிதம் -
முநிமுக்யம்ஸரோஜாதம் முக்திமூலமுபாஸ்மஹே".

(௩)† "ஆஜ்ஞாதிஸ்ரீசக்ரநேத்ராபார்க்யே ஸித்தார்த்தபார்க்யேவத்ஸரேமாஸவிசேஷே - ஶுக்லாஷ்டம்யாம்பௌமவாரேஶ்ரவணர்க்ஷே விஷ்ணோர்ஜந்மப்ராபகாஸாரயோகீ."

முதலாழ்வார்கள்மூவரிலும்வைத்துக்கொண்டு ப்ரதமம் பொய்கையாழ்வார், (௪) "கஇதிப்ரஹ்மணோநாமதேநதத்ராஞ்சிதோஹரி:- ததஃகாஞ்சீதிவிக்யாதாபுரீபுண்யவிவர்த்தநீ" என்கிறபடியே ககாரவாச்யனானப்ரஹ்மாவினாலே ஸர்வேஸ்வரன் அஸ்வமேதத்தாலே ஆராதிதனான ஸ்தலமாகையாலே காஞ்சிபுரமென்று ப்ரக்யாதமாய்ப்புண்யவிவர்த்தநமுமான * கல்லுயர்ந்தநெடுமதிள்சூழ் கச்சியிலே * கால்நிலந்தோய்ந்துவிண்ணோர்தொழும் கண்ணன்வெஃகாவில் பொற்றாமரைப்பொய்கையிலே காஞ்சநபத்மகர்ப்பத்திலே ஐப்பசிமாஸத்திலே விஷ்ணுநக்ஷத்ரமான ஸ்ரவணநக்ஷத்திரத்திலே ஸ்ரீபாஞ்சஜந்யாம்ஸராய்அவதரித்தருளினார். (௫) "ஹேமாப்ஜேஹேமஸரோஜகர்ப்பாத் ஸ்ரீபாஞ்சஜந்யோऽஜநி ‡ தத்ரயோகீ - தரோஹஸோராஸ்வயுஜாக்யமாஸே ஸமஸ்தஜீவாவநகர்மஹேதோ:" என்று திவ்யஸூரிசரிதத்திலே சொல்லிற்றே.

---

(௧) [illegible] (௨) [illegible] (௩) [illegible] (௪) [illegible] (௫) [illegible]

† இந்தஸ்லோகம் சில ஸ்ரீகோசங்களில் இல்லை.

‡ 'திவ்யயோகீ' என்றும்பாடம்.

## பூதத்தாழ்வார் வைபவம்.

(க) "மல்லாபுரவராதீசம் மாதவீகுஸுமோத்பவம் -
பூதம்ஸமாமிபோவிஷ்ணோர் ஜ்ஞாநதீபமகல்பயத்"

(உ) "வந்தேபூதாக்வயோகீந்த்ரம் வரேண்யகுணஸம்பதம் -
லக்ஷ்மீலஸூரபகருணாப்ராப்தப்ரமிதிவைபவம்"

அநந்தரம் "மாதவன்பூதங்கள்" என்று சொல்லலாம்படியான பூதத்தாழ்வார், "கச்சிக்கிடந்தவனூர் கடல்மல்லைத்தலசயநம்" என்று அநுஸந்தேயமான திருக்கடல்மல்லையிலே பரிமளப்ரசுரமாய் திவ்யமாயிருப்பதொரு மாதவிப்பூவிலே அந்த ஐப்பசிமாஸத்திலே அவிட்ட நக்ஷத்ரத்திலே ஸ்ரீகௌமோதகீதாம்ஸராய் அவதரித்தருளினார் (ங) "மாஸேதுர்ஜநிஷ்டே பாரோஸமுத்ரம்புரிமல்லாம்ப்யாம் - லதாக்ருஹாந்தாத்புஷ்பே பூதாமா கௌமோதகீமக்திமயோமுநீந்த்ர:" என்று திவ்யஸூரிசரிதத்திலே சொல்லப்பட்டதிறே.

## பேயாழ்வார் வைபவம்.

(ச) "தர்மாவநீஜாதம்ஸுதாகாரம் மயூரபுர்யாம்மணிகைரவாந்தாத்-பக்த்யாமஹாந்தம்மஹதாஹ்வயந்தம்ஸ்ரீநந்தகாம்ஸம்ஸ்ரிதபக்திரூபம்"

(ரு)† "த்ருஷ்ட்வாத்ருஷ்டம்ததாவிஷ்ணும் ரமயாமயிலாதிபம் - கூபோத்தோத்பலேஜாதம் மஹதாஹ்வயமாஸ்ரயே."

---

(க) [illegible] (உ) [illegible] (ங) [illegible] (ச) [illegible] (ரு) [illegible]

† 'த்ருஷ்டவாந்திதோவாச' என்றும் பாடம்.

(க) "பத்மாரமணபாதாப்ஜ ப்ரேமப்ராக்த்யாமநோஜ்ஞயா -
ப்ராக்தயோகிதிஸிக்பாதம் ருஷிம்வந்தேகுணாம்புதிம்."

அநந்தரம் பேயாழ்வார், "தேனமர்சோலைமாடமாமயிலையிலே ஆதிகேசவப்பெருமாள்கோயில் திருக்கிணற்றிலே யுண்டானதொரு செவ்வல்லிப்பூவிலே அந்த ஐப்பசிமாஸத்தில் சதயநக்ஷத்ரத்திலே ஸ்ரீநந்தகாம்ஸராய் அவதரித்தருளி, (உ) "ஸிதபுலகிதாங்காஸிர்ப்பாநந்தபாஷ்பா களிதநிகிலஸங்கா கத்கதஸ்தோத்ரகீதிர்-அம்ருதலஹரிவர்ஷா ஹர்ஷக்ருத்தோபபங்காவிகதநாகபீதிர்விஷ்ணுபக்திர்விபாதி" என்கிறபடியே விஷ்ணுபக்தியையுடையராய், "பேயனாயொழிந்தேனெம்பிரானுக்கே" என்கிறபடியே பகவதநுபவ ஹிமவத்தாலே "அழுவன் தொழுவன் ஆடிக்காண்பன் பாடிபலற்றுவன்" என்றும், "காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்" என்றும் சொல்லுகிறபடியே பகவதநுபவபாரவஸ்யம் அல்லாத ஆழ்வார்களைக்காட்டில் இவர்க்கு மிக்கிருக்கையாலே பேயாழ்வார் என்றத்தையே நிரூபகமாகவுடையராயிருப்பர். (ங) "தர்மாஸ்ரவாஸிரபூத் விபஸ்சித் ப்ராசேதஸர்ஷேத்த மயூரபுர்யாம்-மஹாபிதாநோமணிகைரவாந்தாத் ஸ்ரீநந்தகாத்மா ஹரிபக்திரூப:" என்று திவ்யஸூரிசரிதத்திலே சொல்லிற்றிறே.

---

## முதலாழ்வார்கள் வைபவம்.

இப்படி இம்மூவரும் யோகிஜாதான்றிக்கே புஷ்பஜாதராய் வந்தவதரித்து, எம்பெருமானுடைய நிர்ஹேதுககடாக்ஷத்தாலே "மூக்குணத்திரண்டவையகற்றி" என்கிறபடியே ராஜஸ தாமஸ ரஹிதராய் (ச) "ப்ரவ்ருத்திஞ்சநிவ்ருத்திஞ்சகார்யாகார்யேபயாபயே - பந்தம் மோக்ஷஞ்சயாவேத்தி புத்திஸ்ஸா பார்த்தஸாத்விகீ" என்று சொல்லு

---

(க) [illegible] (உ) [illegible] (ங) [illegible] (ச) [illegible]

கிற சுத்தஸத்வகுணமான * ஒன்றினில் ஒன்றி நின்று, (௧) "தாஸா வயமிதிப்ராஹிமர் மாகிலோகவர்ஜிதா:" என்றும், (௨) "தாஸ்பூ தாஸ்ஸ்வதஸ்ஸர்வேஷ்யாத்மாந:பரமாத்மந: – நாந்யதாலக்ஷணந்தே ஷாம்பந்தேமோக்ஷேதஸைதவச" என்றும், (௩) "ஸ்வத்வமாத்மநிஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்ரஹ்மணிஸ்திதம்" என்றும், (௪) "ஆத்மதாஸ்யம்ஹரேஸ்ஸ்வாம்யம் ஸ்வபாவஞ்சஸதாஸ்மர" என்றும், (௫) "ஜ்ஞாநாநந்தமயஸ்த்வாத்மா ஶேஷோஹிபரமாத்மந:" என்றும் சொல்லுகிறபடியே ஸ்வதஸ்ஸித்தபகவத்தாஸ்யரஸத்தை யுடையராய், அத்தாலேயுண்டான ஸம்யக்ஜ்ஞாந பக்திவைராக்யங்களை யுடையராய், "புலன்களைந்துபொறிகளா லேதமொன்றுமில்லாத" என்கிறபடியே அக்ஷபாதாதி வர்ஜிதராய், "உனது பாலேபோல் சீரில் பழுத்தொழிந்தேன்" என்று பால்யாத்ப்ரப்ருதி பகவத்குணைகதாரகராயிருக்கிற இவர்கள், ஸம்ஸாரிகள் தங்களைப்போலன்றிகே *உண்டியேயுடையேயுகந்து ஶப்தாதிவிஷயங்களிலே அதிப்ரவணராய்த் *தீதில் நன்னெறிநிற்கவல்லாத செய்து பகவத்விமுகராயிருக்கையாலே "காட்டுமானிடத்தோடொணக்கரிது" என்கிறபடியே அவர்களோட்டை ஸஹவாஸம் தங்களுக்கு துஸ்ஸஹமாய் ஒருவரிருந்தவிடத்திலே யொருவரிராமே க்ராமைகராத்ரராய், இவர்கள் ஒருவரையொருவர் அறியாதே தனித்தனியே வர்த்திக்கிறகாலத்திலே, ஸர்வேஶ்வரனும் (௬) "மமாத்மாஜ்ஞாநிநாம்வர:" என்றும், (௭) "ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம்" என்றுஞ் சொல்லுகிற திருமுகப்படியே தனக்கு ஆத்மபூதரான இவ்வாழ்வார்களைக்கொண்டு ஜகத்தைத்திருத்த வேணுமென்று நினைத்து, (௮) "அநாதிமாயயாஸுப்த:" என்கிறபடியே அநாத்யவித்யாபிபூதராய்ப் போருகிற ஸம்ஸாரிசேதநருக்கு, அஜ்ஞாநாந்தகாரத்தைப் போக்கி ஸ்வவிஷயேஜ்ஞாநபக்திகளை யுண்டாக்குகைக்காக, ஒருநாள் ராத்ரியிலே இம்மூவரையும் * சேர்மமறையாளர் நிறைந்த செல்வத்

---

(௧) [illegible]

(௨) [illegible]

(௩) [illegible]

(௪) [illegible]

(௫) [illegible]

(௬) [illegible]

(௭) [illegible]

(௮) [illegible]

திருக்கோவலூரிலே ஒரு திருவிடைகழியிலே யாத்ருச்சிகமாக ஸங்க தராக்க, இவர்களும் (௧) "வைஷ்ணவோ வைஷ்ணவந்த்ருஷ்ட்வா தண்டவத்ப்ரணமேத்புவி" என்கிறபடியே அந்யோந்யவந்தநபரராய்க் கொண்டு, 'நீரார்?', 'நீரார்?' என்று ஒருவரை யொருவர் கேட்க, (௨) "பகவச்சேஷபூதோஹம் அநந்யார்ஹோஹிதப்ரபோ:" என்றும், (௩) "தாஸோஹம்வாஸுதேவஸ்ய" என்றும், (௪) "தாஸோஹம்கோஸலேந்த்ரஸ்ய" என்றும், (௫) "ஜ்ஞாநாநந்தமயஸ்த்வாத்மாஸேஷோஹி பரமாத்மந:" என்றும் இதயாதிகளாலே தந்தாமுடைய ஸ்வரூபநிர்த்தேஸ ப்ரஸங்க வ்யாஜேந போதயந்த:பரஸ்பரம் பண்ணிக் கொண்டிராநிற்கச்செய்தே, அவ்வளவிலே எம்பெருமான் (௬) "அநந்யாஹிமயாஸீதா பாஸ்கரேணப்ரபாயதா" என்றிருக்குமவனாகையாலே * இறையும் அகலகில்லாத பிராட்டி ஸஹிதனாய்க்கொண்டு * கூராராழி வெண்சங்கேந்தி (௭) "துளஸீகாநநமயதா யத்ரபத்மவநாநிச - வஸந்திவைஷ்ணவாயத்ர தத்ரஸந்நிஹிதோஹரி:" என்கிறபடியே * செந்தமிழ்பாடுவார்கள் இவர்களுக்கு * தழுவி முழுசிப் புகுந்து நெருக்கநிற்க, இவர்களும் 'நம்மையொழியவும் * காமரு பூங் கோவலிடைகழியைப் பற்றிநிற்பாருண்டோ?' என்று பார்க்கைக்காக * வெய்யகதிரோன்விளக்கேற்றியும் * ஞானச்சுடர்விளக்கேற்றியும் * உணர்வென்னுமொளிகொள்விளக்கேற்றியும் பார்த்தருளி, "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்றும், "நீயும் திருமகளும் நின்றாயால்" என்றும் ஸ்ரீமந்நாராயணனுடைய * மைப்படி மேனியையும் * செந்தாமரைக்கண்ணையும் பரமவைதிகரான இவர்கள் * செஞ்சொலுமை உட்கண்ணாலே கண்டநுபவித்து, அநுபவஜநித ப்ரீதியதிஸயம் உள்ளடங்காமல், "பாலேயதமிழர்" என்று

(௧) "வைஷ்ணவோ வைஷ்ணவம் த்ருஷ்ட்வா தண்டவத் ப்ரணமேத் புவி", (௨) "பகவச்சேஷபூதோஹம் அநந்யார்ஹோஹி தத்ப்ரபோ:" (௩) "தாஸோஹம் வாஸுதேவஸ்ய" (௪) "தாஸோஹம் கோஸலேந்த்ரஸ்ய" (௫) "ஜ்ஞாநாநந்தமயஸ்த்வாத்மா ஸேஷோஹி பரமாத்மந:" (௬) "அநந்யா ஹி மயா ஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா" (௭) "துளஸீகாநநம் யத்ர யத்ர பத்மவநாநி ச | வஸந்தி வைஷ்ணவா யத்ர தத்ர ஸந்நிஹிதோ ஹரி: ||"

சொல்லுகிற நற்றமிழாகையாலே "வையந்தகளி," "அன்பேதகளி" "திருக்கண்டேன்" என்கிற திவ்யப்ரபந்தங்களை ஸம்ஸாரிகள் அதிகரித்து அஜ்ஞாநாந்தகாரம் நீங்கி உஜ்ஜீவிக்கும்படி * ஞானத்தமிழாக அருளிச்செய்து ப்ரபந்தீகரித்து உபகரித்தருளி ஜகத்தை வாழ்வித்தருளினார்கள்.

---

## திருமழிசைப்பிரான் வைபவம்.

(௧) "ஶக்திபஞ்சமயவிக்ரஹாத்மநே †ஶூக்திகாரஜதசித்தஹாரிணே -
முக்திதாயகமுராரிபாதயோர் பக்திஸாரமுநயே நமோநம:."

(௨) ‡"ஸித்தார்த்திந்யுஷ்ணரஶ்மௌ மகரமதிகதே த்வாபரே ஜ்ஞாநஸார
க்ஷேத்ரே ஸம்வத்ஸரேऽநேகேதவதிசதிநே ஸப்தமிம் ஸோமவாரே -
நக்ஷத்ரே பார்கவாக்யே முநிவரதநயோ பக்திஸாரோ முநீந்த்ர:
ஶ்ரீமாந் ப்ராபாவதாரம் ஜநதுபக்ருதயே பார்கவேணாஜ்ஞயேத்யுரத்ர."

ஆழ்வார்திருமழிசைப்பிரானுமிரூர், * ஒருத்திமகனாய்ப்பிறந்து ஓரிரவிலொருத்திமகனாயொளித்து வளர்ந்தருளின க்ருஷ்ணனைப் போலே பயந்து, அவதரித்தருளினபடியும், வளர்ந்தருளினபடியும், எங்ஙனேயென்னில்:— (௩) "ததோऽகிலஜகத்பத்ம போதாயாச்யுத பாநுநா - தேவகீபூர்வஸந்த்யாயாமாவிர்ப்பூதம்மஹாத்மநா" என்கிற படியே யதுகுலத்திலே பிறந்து (௪) "அநார்த்ரமார்தாம் விரஸம்ர

---

(௧) "𑌶𑌕𑍍𑌤𑌿𑌪𑌞𑍍𑌚𑌮𑌯𑌵𑌿𑌗𑍍𑌰𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑍇 𑌶𑍁𑌕𑍍𑌤𑌿𑌕𑌾𑌰𑌜𑌤𑌚𑌿𑌤𑍍𑌤𑌹𑌾𑌰𑌿𑌣𑍇 ।
𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌦𑌾𑌯𑌕𑌮𑍁𑌰𑌾𑌰𑌿𑌪𑌾𑌦𑌯𑍋𑌰𑍍𑌭𑌕𑍍𑌤𑌿𑌸𑌾𑌰𑌮𑍁𑌨𑌯𑍇 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 ॥"
(௨) "𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌰𑍍𑌥𑌿𑌨𑍍𑌯𑍁𑌷𑍍𑌣𑌰𑌶𑍍𑌮𑍌 𑌮𑌕𑌰𑌮𑌧𑌿𑌗𑌤𑍇 𑌦𑍍𑌵𑌾𑌪𑌰𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌾𑌰
𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑍇 𑌸𑌂𑌵𑌤𑍍𑌸𑌰𑍇 𑌕𑌲𑌿𑌦𑌿𑌨𑌸𑌹𑌿𑌤𑍇 𑌪𑌕𑍍𑌷𑌕𑍇 𑌸𑌪𑍍𑌤𑌮𑍀 𑌸𑍋𑌮𑌵𑌾𑌰𑍇 ।
𑌨𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑍇 𑌭𑌾𑌰𑍍𑌗𑌵𑌾𑌖𑍍𑌯𑍇 𑌮𑍁𑌨𑌿𑌵𑌰𑌤𑌨𑌯𑍋 𑌭𑌕𑍍𑌤𑌿𑌸𑌾𑌰𑍋 𑌮𑍁𑌨𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌃 𑌶𑍍𑌰𑍀
𑌮𑌾𑌨𑍍𑌪𑍍𑌰𑌾𑌦𑍁𑌰𑍍𑌭𑌾𑌵𑌮𑌾𑌸 𑌜𑌗𑌦𑍁𑌪𑌕𑍃𑌤𑌯𑍇 𑌭𑌾𑌰𑍍𑌗𑌵𑍇𑌣𑌾𑌜𑍍𑌞𑌯𑍇𑌦𑍍𑌯𑍁𑌰𑌤𑍍𑌰 ।" (௩) "𑌤𑌤𑍋𑌽𑌖𑌿𑌲𑌜𑌗𑌤𑍍𑌪𑌦𑍍𑌮𑌬𑍋𑌧𑌾𑌯𑌾𑌚𑍍𑌯𑍁𑌤𑌭𑌾𑌨𑍁𑌨𑌾 ।
𑌦𑍇𑌵𑌕𑍀𑌪𑍂𑌰𑍍𑌵𑌸𑌨𑍍𑌧𑍍𑌯𑌾𑌯𑌾𑌮𑌾𑌵𑌿𑌰𑍍𑌭𑍂𑌤𑌂 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌾" (௪) "𑌅𑌨𑌾
𑌰𑍍𑌦𑍍𑌰𑌮𑌾𑌰𑍍𑌦𑍍𑌰𑌂 𑌵𑌿𑌰𑌸𑌂 𑌸𑌰𑌸𑌾𑌢𑍍𑌯𑌮𑍇𑌕𑌂 𑌮𑍁𑌹𑍁𑌰𑍍𑌵𑌿𑌤𑌂 𑌕𑌰𑌾𑌸𑌸𑍀𑌕 ।
𑌮𑌾𑌤𑍁𑌃 𑌸𑌮𑍀𑌕𑍍𑌷𑌾𑌰𑍍𑌹𑌮𑌵𑌾𑌪 𑌪𑌿𑌣𑍍𑌡𑌂 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌂 𑌤𑌤𑍍𑌤𑌦𑌨𑍁𑌪𑍍𑌰
𑌵𑌿𑌷𑍍𑌟𑌂"

† 'ஶூக்திஹாரஜிதசித்தஹாரிணே' என்றும்பாடம்.
‡ இதுசில ஶ்ரீகோசங்களில் இல்லை.

ஸாட்ய மபல்லவம்பல்லவிதந்த்ரஸஸஹீத் - மாலோபஹாஸீரதகாப பூவர் காரயேணை ககதகுலம்ப்ரவிஷ்டே,, என்கிற படியே *நந்தன் குலமதலையாய் மோபகுலத்திலே வளர்ந்தருளினாற்போலே இவ்வாழ்வாருடைய திருவவதாரமும் ஒருபிறவியிலே இருபிறவியாயிறே யிருப்பது.

அதுஎங்ஙனேயென்னில்;— அத்ரி ப்ருகு வஸிஷ்ட பார்க்கவ ஆங்கிரஸாதிகளான மஹர்ஷிகளெல்லாரும் ப்ரஹ்மாவின்பக்கலிலே சென்று, 'பூலோகத்திலே உத்க்ருஷ்டதமமான க்ஷேத்ரத்திலே எங்களுக்கு நித்யவாஸம்பண்ணவேணும்: அதனை நிஸ்சயித்துச் சொல்லவேணும்' என்று கேட்க,ப்ரஹ்மாவும் உலகும் மழிசையும் உள்ளுணர்ந்து விஸ்வகர்மாவைக்கொண்டு பஞ்சாஸத்கோடிவிஸ்தீர்ணையாய் ஸஸைலாம்புதிகாநநையான பூமியெல்லாம் ஒருதட்டும வித்தம பவக்ஷேத்ரமான திருமழிசையொன்றும் ஒருதட்டுமாகத் துலையிலே வைத்துநிறுக்க, (க)"தாத்ராதுலிதாச லகுர் மஹீ"என்கிறபடியே பூமியைவைத்தபக்கம் நொய்தாய், * மாநீர்மழிசையை வைத்தெடுத்த பக்கம் கனத்திருக்கக் கண்டு, அதற்கு 'மஹீஸாரக்ஷேத்ரம்' என்று பேரிட்டு நிரூபிக்கையாலே, அத்ரிஷிகளும் அவ்விடத்தைவிடாதே நித்யவாஸம்பண்ணிக்கொண்டிராநிற்க;

அவர்களிலே பார்க்கவமஹர்ஷியானவர், (உ) "பஸ்சிமே யோஜனார்த்தேச விதேஹாதிஷ்டிதம்வனம் - பார்க்கவோ தீர்க்கஸத்ரேண வாஸுதேவம் ஸநாதநம் - அபிபூஜ்ய யதாந்யாய மிதிநித்யமகல்பயத்" என்று ப்ரஹ்மாண்ட புராணத்திலே சொல்லுகிறபடியே, தீர்க்கஸத்ரமென்கிற யாகத்தாலே ஸர்வாந்தர்யாமியான ஸ்ரீமந்நாராயணனை ஸக்ரமமாக யஜித்துக்கொண்டுபோருகிற காலத்திலே, பார்க்கவருடைய பத்நி கர்ப்பிணியாய், "பன்னிருதிங்கள் வயிற்றிற்கொண்ட" என்கிறபடியே பன்னிரண்டுமாஸத்துக்குப் பின்பு தைமாஸத்தில் மகாநக்ஷத்ரத்தில் பிண்டாக்ருதியாக ப்ரஸவிக்க, ஸாந்தர்பமாகம்போல திருமழிசைப்பிரான் அவதரித்தார். (ங) "ஸாகர்ப்பமாதத்தமுநேஸ்ச

---

(க) [illegible] (உ) [illegible] (ங) [illegible]

பத்நீ ஸாதர்மசாம்போகதநருவிஷ்டம - பபாதகர்ப்போபுவிநைதஸ்யமாஸே மகாபிதாகே மஹநீயதாரே” என்று திவ்யஸூரிசரிதத்திலே சொல்லிற்றிறே.

அனந்தரம், உல்பஸம்வேஷ்டிதமாய் ஒன்றும்ரூபிகரியாமல் அவதரிக்கையாலே பார்க்கவரும் தத்பத்நியும் அநாதரித்து ஒருபிரப்பங்தூற்றின்கீழே வைத்துப்போக, அந்த உல்பாவ்ருத பிண்டாக்ருதியானது, அகில ஜகந்மாதாவான பெரியபிராட்டியாரநுக்ரகத்தாலே பூமிப்பிராட்டி ஸம்ரக்ஷிதமாக வைத்துக்கொண்டிருக்கச்செய்தே “இக்கெனறு செனனிக்கால் சீரிடைப்பின் கண்ணுயிராய், ஒக்கவுருப் பாய்ந்தறிவா றுள்நிறைந்து” என்கிறபடியே ஸர்வாவயவங்களும் பரிபூர்ணமாய் அதிலே ஜீவன் ஸ்புரித்துத்தோற்றி, “பேதைக்குழவி” என்கிறபடியே அத்யந்தம்சிசுவாய்ப் பசுங்குழந்தையான ஆழ்வார், பசிதாஹங்களாலேநொந்து ஸ்தந்யார்த்தியாய் விஜநமானவனத்திலே ஒருபிரப்பந்தூற்றிலே ரோதநம்பண்ண, அவ்வளவிலே மஹீஸார க்ஷேத்ராதிபதியான பெருமான் அங்கே எழுந்தருளிக் கருணாம்ரு தௌகநிஷ்யந்தியான கடாக்ஷபாதங்களாலே இவர்பசிதாஹம்தீரும் படி குளிரக்கடாக்ஷித்து ஆராவமுதமான ஸ்வவிக்ரஹத்தைக் காட்டி ஆச்வாஸிப்பித்து மறைய, இவரும், தத்விரஹாஸஹிஷ்ணுவாய் மீளவும் அழுதொடங்கினர்.

அங்கே திருவாளன் என்கிற ஒருத்தன் பிரம்பறுக்கப்போன விடத்திலே இவருடைய ஆர்த்தநாதம் கேட்டுக் கூடவந்தவர்களுடன் சோதித்து இவரைக் கண்டு ஹர்ஷப்ரகர்ஷத்துடனே எடுத்துக் கொண்டுவந்து, தன்னுடைய பத்நியான பங்கயச்செல்வியார்கையிலே கொடுக்க, அவளும் வந்த்யையாகையாலே மிகவும் ப்ரீதையாய் “உத்தானஞ்செய்து” என்கிறபடியே எடுத்துக்கொண்டு, புத்ரப்ராப்தியைப்பண்ணி, * தான்கொண்டாள் கொலோ தானே பெற்றாள் கொலோ என்று விகல்பிக்கலாம்படி ஆதரத்துடனே ஸ்நேஹபூர்வகமாக வளர்க்க வளர்த்தருளுகிற வளவிலே, “வனமுலைகள்சோர்ந்து பாய” என்கிறபடியே முலைப்பால்சுரக்க, இவளும் நந்தகோபனணிசிறுவனாள் சுரந்தமுலையுணாய்” என்னும்படியே முலைகொடுக்கத்தேட, இவரும் ஸ்தந்யபாநாதிபோஜ்யங்களிலே நிராசராய்ப் பகவத்குணாநுபவதாரகராய் வாக்வ்யவஹாரரோதநாதிகளொன்றுமின்றியே மலமூத்ர ரஹிதராய்ப் பரிபூர்ணமாக ஸர்வாவயவங்களும் வர்த்திக்க எழுந்தருளியிருக்க,

இந்த ஆஸ்சர்யத்தை, அபுத்ரவானுமாய், திருமழிசையிலே வாஸம்பண்ணும் சதுர்த்தவர்ணத்திலே ஜாதனுமாய், மஹாப்ராஜ்ஞனுமான ஒருவ்ருத்தன், கேட்டு, பாங்காகப் பாலமுதுகாய்ச்சிக் கொண்டு ஸ்வபார்யாஸஹிதனாய் இவரிருக்கிறவிடத்திலே விடியற் காலத்தே வந்து, பஞ்சஸக்திமயமான இவருடைய அப்ராக்ருத திவ்யதேஜஸ்ஸைக் கண்டு அத்யாஸ்சர்யப்பட்டு, தான் கொண்டு வந்த பாலமுதை ஸமர்ப்பித்து ப்ரார்த்தித்து 'அமுதுசெய்யப்பண்ண வேணுமென்று இத்தைக்கொண்டுவந்தேன்: அமுதுசெய்தருளவே ணும்' என்று பஹுமாநம் வேண்டிக்கொள்ள, ஆழ்வாரும் அவனிடத்தில் க்ருபாதிஶயத்தாலே அவன்கொண்டுவந்த பாலமுதை அமுது செய்துபோகவிட, அவர்களும் அப்படியே பலநாளும் ப்ரீதி யுடனே பாலமுதை அமுதுசெய்விக்க, ஒருநாள், ஆழ்வார், வ்ருத்ததம்பதிகளுடைய மனோரதமறிந்து, அந்நைக்கு அவர்கள் கொண்டுவந்த பாலமுதை அமுதுசெய்து, சேஷித்த பாலை 'நீங்கள் ஸ்வீகரியுங்கோள்: உங்களுக்கு நல்லபுத்ர னுண்டாவன்' என்று ப்ரஸாதிக்க, அவர்களும் அப்படியே ஸ்வீகரித்து யௌவநாவஸ்தையையடைந்து, தத்பத்நியும் கர்ப்பவதியாய் ஒன்பதுமாஸம் சென்று பத்தாம்மாஸம் நிறைந்தவாறே, * கேசவன்றமராய் * காக்கொண்டு மானிடம் பாடாத மஹாப்ராஜ்ஞரான ஒருகுமாரனை ப்ரஸவிக்க, ஸ்ரீவிதுரரைப்போலே விளங்குகிற அந்தப் புத்ரனைக் கண்டு, * பத்துநாளுங்கடந்த இரண்டாநாள் அவருக்கு 'கணிகண்ணன்' என்று திருநாமம்சாத்தி, அகிலவித்யைகளையும் அதிகரிப்பித்தார்கள்.

பின்பு பகவத்த்யாநாஸ்வாதநத்ருப்தசேதநராய்,விடப்பட்ட அந்நபாநபோகாபிலாஷையை யுடையராய், பைத்ருகவேஶ்மத்திலே வளர்ந்தருளுகிற ஆழ்வாரும், ருஷிபுத்ரரானபடியாலே ஏழுதிருநக்ஷத்ரத்துக்குப் பின்பு "இளைப்பினையியக்கம்நீக்கி யிருந்துமுன்னிமையைக் கூட்டி, அளப்பிலைம்புலனடக்கி" என்கிறபடியே யமநியமாதியான அஷ்டாங்க யோகாப்யாஸத்திலே திருவுள்ளமாய், அதுக்கு ஜகத்காரணவஸ்துவை த்யாநத்துக்கு விஷயமாகச் சொல்லுகையாலே அந்த வஸ்துவை அறியவென்றால் * பிணக்குஞ்சமயம் பலபலவாகையாலே அவையவைதோறும் புக்கு ஆராய்வோமென்று கொண்டு, சாக்யோலூக்யாக்ஷபாதக்ஷபணகபிலபதஞ்சலிக ளாகிற பாஹ்யஸமயங்களை, ஶைவ மாயாவாத ந்யாய வைஶேஷிக பாட்ட ப்ராபாகராதிகளாகிற குத்ருஷ்டிஸமயங்களையும் புக்கு * உணர்ந்துணர்ந்துரைத்துரைத்து ஆராய்ந்துபார்த்தவிடத்தில், "இறையிலியுணர்வரிது" என்கிறபடியே

அவற்றிலேஒருபசையில்லாமையாலே அங்கு நசையற்று "அறிபாச்சம ணர் அயர்த்தார்பவுத்தர்,சிறியார்சிவப்பட்டார்" என்றுகொண்டு நமையா ன*இடங்கொள்சமயத்தையெல்லாம் எடுத்துக்களைந்து, "கலியுகக்கற் றமாந்தர் காண்பரோ கேட்பரோதான்" என்று இதரவிஷ்ந்தாந்தங்க ளை நச்வரமென்று கைவிட்டு, இப்படி எழு நூறு திருநக்ஷத்ரம் சென்றவாறே;

ஸ்ரீவைஷ்ணவராய், பரமவைதிகவித்தாந்த நிஷ்டராய், "இனி யறிந்தேன் ஈசற்கும் நான்முகற்குத் தெய்வம்" என்று அறுதியிட்டுக் கொண்டு *வேதாந்தவிழுப்பொருளின் மேலிருந்த விளக்கை அறிந்து தத்ப்ரவணராக, ஸர்வேஸ்வரனும் அதுவே பற்றாசாக இவர்க்கு *மயர்வறமதிநலமருளித்தன்னுடைய திவ்யாத்மஸ்வரூபத்தையும், ததாஸ்ரயமான ஜ்ஞாநசக்த்யாதி கல்யாணகுணங்களையும், உபயத்தையும் ப்ரகாசிப்பிக்கிற திவ்யமங்களவிக்ரஹத்தையும், ததாதாரமான கிரீடாதிநூபுராந்தமான திவ்யபூஷணவர்க்கத்தையும், அவற்றோடே விகல்பிக்கலாம்படியான ஸங்கசக்ராதி திவ்யாயுதங்களையும், இடைக் கட்டிவெரித்தவிலாவாகாமே அநுபவிக்கிற லக்ஷ்மீப்ரப்ருதி மஹிஷீவர்க்கத்தையும், (க) "பவாம்ஸ்துஸஹவைதேஹ்யா" என்றும், "அடிமைசெய்வார்திருமாலுக்கு" என்றும், "சூழ்ந்திருந்தேத்துவர்" என்றும், "ஏவமற்றமரராட்செய்வார்" என்றும் சொல்லுகிறபடியே அச்சேர்த்தியிலே அடிமைசெய்கையே தங்களுக்கு தாரகாதிகளாகவுடையரான திவ்யபரிஜநவர்க்கத்தையும், அந்தப்போகத்துக்கு வர்த்தகமாய் *நலமந்தமில்லதோர் நாடாய்ப் போகவிபூதியான பரமபதத்தையும் ஸாக்ஷாத்கரிப்பித்து, பின்னையும் ப்ரக்ருதிபுருஷகாலாத்மகமான லீலாவிபூதியினுடைய ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களை ஸத்வாரகமாகவும் அத்வாரகமாகவும்நின்று "இன்புறு மிவ்விளையாட்டுடையான்" என்கிறபடியே தனக்கு லீலையாக வுடையனாயிருக்கிற படியையும் காட்டிக்கொடுக்க;

இப்படி உபயவிபூதிநாதனான தான், (உ) "யஸ்யாபித்மாநபஸ்மஹாத்மப்ரஜாபதிர்விஸ்வஸ்ருக்" என்கிறபடியே சூழ்ந்தநீருலகெல்லாம்படைக்கும்படி முதலிலே தனக்கு ஜ்யேஷ்டபுத்ரனுக ப்ரஹ்மாவைத் தன்திருநாபீகமலத்திலே (௩) "யோப்ரஹ்மாணம் வித

(க) "[illegible]" (உ) "[illegible]" (௩) "[illegible]"

நாதி பூர்வம்” என்னும்படி முன்னுற உத்பன்னனுக்கின படியையும் (க) “ப்ரஹ்மண꞉புத்ராய ஜ்யேஷ்டாய ஶ்ரேஷ்டாய” என்கிறபடியே அந்த ப்ரஹ்மாவுக்கு ஜ்யேஷ்டபுத்ரனான ருத்ரன் உத்பன்னனான படியையும் ப்ரகாசிப்பித்தருள, இவரும் “நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனும், தான்முகமாய்ச் சங்கரனைத்தான் படைத்தான்” என்று தம் வாக்காலே சொல்லும்படி இவற்றையெல்லாம் இவர் ஸம்ஶயவிபர்யயமற அறிந்து, “சாக்கியம் கற்றோஞ் சமண்கற்றோஞ் சங்கரனார், ஆக்கிய ஆகமநூ லாராய்ந்தோம் - பாக்கியத்தால், செங்கட்கரியானைச் சேர்ந்தோம் யாம் தீதிலமே, எங்கட் கரியதொன் றில்” என்று அறுதியிட்டருளி, இதரவிஷய நிவ்ருத்திபூர்வகமாக, * திருநின்றபக்கம் திறவிதென்றோர்ந்து, (உ) “ஆலோட்ய ஸர்வஶாஸ்த்ராணி விசார்ய ச புன꞉ புன꞉ - இதமேகம் ஸுநிஷ்பந்நம் த்யேயோ நாராயண꞉ ஸதா” என்றும், (ந) “யோகேஶ்வரம் ஜகந்நாதம் விஷ்ணும் ஜிஷ்ணும் ஶ்ரிய꞉பதிம் - பத்மநாபம் விஶாலாக்ஷம் சிந்தயாமி ஜகத்பதிம்” என்றும் சொல்லுகிறபடியே ஜகத்காரணபூதனும் ஸர்வாந்தர்யாமியாய்ப் புண்டரீகாக்ஷனும் ஜகந்நாதனுமான ஶ்ரிய꞉பதியை த்யாநம்பண்ணிக்கொண்டு க்ருதார்த்தராய்த் † திருவல்லிக்கேணியிலே கஜேந்த்ரஸரஸ்ஸின் கரையிலே எழுநூறு ஸம்வத்ஸரம் பகவதநுபவம் பண்ணிக்கொண்டு யோகத்திலே எழுந்தருளியிருக்கிறகாலத்திலே, ஒருநாள் இவர் நிரந்தரபகவதநுபவத்துடனே கந்தாஸீவநஞ்செய்யாநிற்க, அவ்வளவிலே ருத்ரனும் அத்ரிகந்யாஸஹிதனுய் ருஷபாரூடனுய் த்ரிசூலபாணியாய் வ்யோம மார்க்கத்திலே செல்லாநிற்க, ஆழ்வாரும் அவர்களைக் கண்டு அவன்நிழல் தன்மேற்படாமல் ஒதுங்க, இதைத் தம்பதிகளிருவரும் கண்டிருக்க, அவ்வளவிலே ருத்ரனைக் குறித்துப் பார்வதி ‘இவராரோவென்று அறிந்துபோவோம்’ என்ன, ருத்ரனும் தத்பக்தியுடனே ‘இவர் மஹாநுபாவர்: நம்மைக்கணிசியார்’ என்ன, ‘ஆகிலும், அவரைக்கண்டுபோவோம்’ என்ன, அவனும் ஸம்மதித்து இவரண்டையிலே வந்துநிற்க, இவரும் அவனைக் கண்டொ

(க) “ப்ரஹ்மணே꞉ புத்ராய ஜ்யேஷ்டாய ஶ்ரேஷ்டாய” (உ) “ஆலோட்ய ஸர்வஶாஸ்த்ராணி விசார்ய ச புன꞉ புன꞉ । இதமேகம் ஸுநிஷ்பந்நம் த்யேயோ நாராயண꞉ ஸதா” (ந) “யோகேஶ்வரம் ஜகந்நாதம் விஷ்ணும் ஜிஷ்ணும் ஶ்ரிய꞉பதிம் । பத்மநாபம் விஶாலாக்ஷம் சிந்தயாமி ஜகத்பதிம் ।”

† ‘திருமழிசையிலே’ என்றும் பாடபேதம்.

த்துப்பாராமல் உதாஸீநித்திருக்க, அவனும் 'நாம்வந்திருக்க நீர் அல
க்ஷ்யம்பண்ணலாமோ?' என்ன, இவரும் 'உன்னைக்கொண்டு என்
னப்ரயோஜநமுண்டெனக்கு?' என்ன, அவனும் 'நாம் உமக்கு
ஒன்றுதரக்கடவதாக வந்தோம்' என்ன, இவரும் 'நமக்கு ஒன்றும்
வேண்டாம்' என்ன, அவனும் 'நம்வரவு வ்யர்த்தமாகாமல் உம் அபீஷ்ட
த்தைக் கேட்டுக்கொள்ளீர்' என்ன, ஆழ்வாரும் புன்முறுவல்செய்து 'ஆ
கில், மோக்ஷந்தரவல்லையாகில் தா' என்ன, 'அதுஎன்னால் தரக்கடவதன்று
ஸ்ரீமந்நாராயணனாலே' என்ன, 'ஆனால், இன்றுசாவாரைநாளைச்சாகும்ப
டிபண்ணவல்லையோ?' என்ன, 'அதுவும் கர்மாநுகுணமன்றோ?' என்ன,
'ஆனால், இவ்வூசியின்பின்னே நூல்வரும்படி வரப்ரதானம்பண்ணாய்' என்
று அபஹஸித்துச்சொல்ல, அவனும் இவ்வார்த்தையைக்கேட்டு மிக
வுங்குபிதனாய், 'இவரை அநங்கனைப்போலே பார்க்கக்கடவேன்' என்று,
பொறியும் புகையும் எழும்படி தன்நெற்றிக்கண்ணைத் திறந்துவிட,
'அக்கண்ணில்நின்றும் ஜ்வாலாஜாஜ்வல்யமாநமாய் ஸம்வர்த்தாக்நிபோ
லேசுட்டுக்கொண்டெரிகிற ஜ்வலநப்ரரோஹத்தைக்கண்டு ஆழ்வாரும்
தம்முடைய வலத்திருவடியின பெருவிரலின்மேல் ஒருகண்ணைத் திறந்து
விட, அக்கண்ணிலின்றும் அக்நி பாணபஹுஹுதவஹகோடிகல்பமாய்
ஜ்வலித்துக்கொண்டெழும்ப, கோடிவைஶ்வாநரப்ரக்யமாய் அத்யக்ஷ
கோடிய தீர்க்கஜ்வாலாஜாஜ்வல்யமாநாக்நியில் ஶம்புவின் லோசநாக்நி
கத்யோதப்ராயமாய் அடங்க, †(பின்னும் அந்தமஹதக்நியானது உல
கங்களை ஆக்ரமித்து ம்ருத்யுஞ்ஜயனைச் சுற்றிக்கொள்ள), ஶம்புவும்
அந்த அங்குஷ்டலோசநாக்நிஜ்வாலையைப் பொறுக்கமாட்டாமல்†(மிக
வும் பரிதபித்து "அகதிஶ்ஶரணமஸ்மி த்வமேவ ஶரணம் மம-தஸ்
மாத்காருண்யபாவேந ரக்ஷ ரக்ஷ ஜநார்த்தந" என்று முறையிட, அப்
போது முப்பத்துமுக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிர ருஷி
களும் சதுர்முகப்ரஹ்மாவும ஸ்ரீவைகுண்டநாதன்மேல் சரணப்ரபத்தி
பண்ணிமுறையிட, எம்பெருமானும்)புஷ்கலாவர்த்தகமென்கிற ப்ரள
யகாலமேகங்களை அக்நி ஶமிக்கும்படி ஆஜ்ஞாபிக்க, †(மேகங்கள் தன்
டன் ஸமர்ப்பித்து 'ஸ்வாமீ! ஸுதர்ஶநாம்ஶஜரான பார்க்கவமஹர்ஷி
பாதாங்குஷ்டநேத்ராக்நியை ஶமிப்பிக்கவும் பார்க்கவும் எங்களுக்கு
ஶக்தியும் உண்டோ?' என்ன, ஸ்வாமியும 'என்னுடைய க்ருபை
யாலே உங்களுக்குப் பலமுண்டாம்' என்ன,) அம்மேகங்களும்
மின்னி முழங்கி வில்லிட்டு அகிலதாபங்களும் அடங்கும்படி 'ஆகா
ஶாவகாசமடைய நிறைந்து அபிவர்ஷிக்க, அவ்வர்ஷத்தாலே எங்

---

† குண்டலித்த க்ரந்தங்கள் சிலப்ரதிகளிற் காணப்படுகின்றன.

நிற அக்கியும் அணைந்து பெருவெள்ளம்கோக்க, ஆழ்வாரும் (௧) “கிரயோவர்ஷதாராபிஹதங்பமாநாகவிவ்யதநூ”என்கிறபடியே அத்ரிராஜனைப்போலே வர்ஷதாரைக்கு இளைபாமல் பகவதநுபவ தத்பரராயிருக்கிறபடியைக்கண்டு அவனும் விஸ்மயப்பட்டு இவருக்கு ‘பக்திஸாரர்’ என்று திருநாமத்தையும் சாத்தி இவர்வைபவத்தைக்கொண்டாடி ப்ரதக்ஷிணம்பண்ணி, ‘அம்பரீஷனாலே துர்வாஸர் அவமானப்பட்டானிறே; ஆகையாலே, பாகவதர்கள் ஸுதுர்ஜயர்’ என்று ஸ்வபத்நிக்கு உரைத்துக்கொண்டு யதாஸ்தாநமே போந்தான்.

பின்னையும் ஆழ்வார் பூர்வம்போலே யோகத்திலேயெழுந்தருளியிருக்க, யாத்ருச்சிகமாக வ்யாக்ராரூடனாய் சக்திஹரா னென்பானொருகேசரன் ஆகாசமார்க்கத்திலே செல்லாநிற்க, ஆழ்வாருடைய யோகப்ரபாவத்தாலே இவர்மேலேபோக க்ஷமமன்றிக்கே வ்யாக்ரமும் திமிர்ந்துநிற்க, அவனும் இதேதோவென்று பார்த்துக்கொண்டு வருமளவில், கீழே மௌநியாய் யோகத்திலே யெழுந்தருளியிருக்கிற ஆழ்வாரைக் கண்டு விஸ்மயப்பட்டுத் தத்க்ஷணத்திலே ஆகாசத்தினின்றும் பூமியில் வந்து வ்யாக்ரவாஹநத்தினின்றும் இறங்கி இவரண்டையிலேவந்து ‘பார்க்கவமுநீந்த்ரரே! இக்கந்தாவரணத்தைப் போகட்டு நான் தருகிற திவ்யபட்டஸமிதமான இக்கவசத்தைத் தரியும்’ என்று ஒருகவசத்தைக்கொடுக்க, இவரும் அத்தை உபேக்ஷித்து ஸ்வஸங்கல்பத்தாலே மணிஸ்வரூபமாய் த்யுமணிப்ரபோபமமான கவசத்தை அவனுக்குக்காட்ட, அவனும் லஜ்ஜாவிஷ்டனாய், தன் கழுத்தில் ஹாரத்தை வாங்கி ‘இதனை அக்ஷமாலையாகத்தரியும்’என்று கொடுக்கப்போக, இவரும் தம கழுத்தில் துளஸீபத்மாக்ஷமாலையை வாங்கி ‘இத்தை பாரும்’ என்ன, அது ரத்நஹாரமாய்விளங்கக் கண்டு, அவனும ‘இவர் மஹாநுபாவர், மஹாபரிபூர்ணர்’ என்று தண்டனிட்டு, இவர்வைபவத்தைக் கொண்டாடி யதாஸ்தாநமே போந்தான்.

பின்னையும் அங்கே இவர் யோகநிஷ்டரா யெழுந்தருளியிருக்கச்செய்தே, ‘கொங்கணஸித்தன்’ என்கிற பேரையுடையனாய் ரஸவாதியா யிருப்பானொருவன் வந்து, இவ்வாழ்வாருடைய வைபவத்தைக் கண்டு இவருக்குக் காணிகோடியைப் பேதிப்பதான ரஸகுளிகையை ஸமர்ப்பிக்க, இவரும் அத்தை அநாதரித்து ‘நமக்குவேண்டாம்’ என்று அவனுக்குத் தம்முடைய பொன்னொத்த மேனியின்

---

(௧) “ஸ்ரயோவர்ஷதாராபிஹதங்பமாநாகவிவ்யதநூ:”

புழுதியோடே தம்காதிற் குறும்பியைப் புரட்டி 'இந்தக் காணி குளிகை கோடாகோடியைப் பேதிக்கும்' என்று கொடுத்தருள, அவனும் அப்படியே பரீக்ஷிக்க, அது சொன்னபடிக்கு ஒத்திருக்கையாலே அதிப்ரீதியுடனே ஆழ்வாரைத் தண்டனிட்டு, 'நச்போஸநம்' என்று க்ருதார்த்தனாய்ப் போந்தான்.

அநந்தரம் திருமழிசைப்பிரானும், ஒரு குஹாந்தராவிஷ்டராய், விப்ருதாக்ஷவ்ருத்தியையுடையராய்ப் யோகத்திலே யெழுந்தருளியிருக்க, அவ்வளவிலே பொய்கை பூதன் பேயாழ்வாராகிற முதலாழ்வார்கள் மூவரும் * எங்குந்திரிந் தரங்கனெம்மானுக்கே காதல்செய் தொண்டராய் ஸஞ்சரித்து வருகிறவர்கள், ஸமீபத்திலே அப்ராக்ருததிவ்யதேஜஸ்ஸைக் கண்டு ஆச்சர்யப்பட்டு, 'இத்தை ஆராயக்கடவோம்' என்று எங்கும் திரிந்து சோதித்துவந்து, குஹாந்தராவிஷ்டரான பக்திஸாரரை 'இம்மஹாநுபாவர் ஆரோ?' என்று திவ்யமான * நெஞ்சென்னும் உட்கண்ணாலே கண்டு, 'பார்க்கவமுநீந்த்ரரே! ஸுகமேயிருக்கிறீரோ?' என்று குசலப்ரச்நம்பண்ண, அவரும் 'பத்மமாதவீகுஸுமகைரவோத்பவ முனிகள்' நன்றாயிருக்கிறீர்களோ?' என்று வினவியருளி, அநயோந்ய வந்தந பரராய் ஆஹ்லாதபரீதநேத்ராம்புக்கள் பனிப்பப் புளகீக்ருதகாத்ரராய் ஒருவரையொருவர் ஆலிங்கித்துக்கொண்டு மிகவும் ப்ரீதியுடனே எல்லாரும் ஸதாபர குணாவிஷ்டராய் யோகத்திலே எழுந்தருளியிருந்தார்.

இவர்கள் ஒருவர்க்கொருவர் பாலும்பாலும் சேர்ந்தாற்போலவும், தேனும்தேனும் கூடினாற்போலவும், பகவச்சரணாரவிந்தயாரஸம்ருதாஸ்வாதகம் *தேனாயெப்பொழுதும் தித்தித்து ஐகாஸ்யத்தாலே எல்லாருக்கும் ப்ரணயரஸம் உச்சலிதமாம்படி பகவதநுபவம் பண்ணியிருந்தார்கள். பின்பு எல்லாரும் உகந்ததிருவுள்ளத்தையுடையராய் மயிலாபுரியேற வெழுந்தருளி, அங்கே பேயாழ்வார் திருவவதரித்தருளின கைரவதீர்த்தத்தையும் ப்ரீதியுடன் ஆலோகித்துக் கொண்டு தத்தீரத்திலே சிலகாலம் யோகத்திலேயெழுந்தருளியிருந்து பின்பு "ஓடித்திரியும் யோகிகள்" என்னும்படியே பூர்வம்போலே பார்க்கவமுநீந்த்ரனை அநுவர்த்தித்து அநுமதிகொண்டு பூஸஞ்சாரார்த்தமாக முதலாழ்வார்கள்மூவரும் எழுந்தருளினார்கள்.

அநந்தரம், பார்க்கவமுநீந்த்ரரும், தம்முடைய திருவவதாரஸ்தலமான திருமழிசையிலே எழுந்தருளி, சாத்துகைக்குத் திருமண்வேண்டிக் கல்விசோதித்தவிடத்தில் திருமண் அகப்படாமல்

மூலித்துக்கிடக்க, அப்போது திருவேங்கடத்தெந்தை இவர்ஸ்வப்னத்திலே யெழுந்தருளித் திருமண் இருக்குமிடம் அடையாளமாகக் காட்டியருள, அங்கே திருமண்கண்டெடுத்து அத்திருமண்கொண்டு பன்னிரண்டுதிருநாமஞ் சாத்தியருளிப் பெரியப்ரீதியுடனே "சிந்தை மற்றொன்றின் திறத்ததல்லாத் தன்மை" என்கிறபடியே க்ஷுத்ர புருஷார்த்தங்களில் ஆசையற்றுப் பகவதநுபவம் பண்ணிக்கொண்டு எழுந்தருளியிருக்கிற இவரும், பொய்கைப்பிரானவதரித்தருளின பொய்கைப்ரதேசத்திலே சிலகாலம் ஸேவித்திருக்கத் திருவுள்ளமாய், (க) "யத்ஸத்யவ்ரதம்நாம க்ஷேத்ரம்பாபவிநாஶநம் - புண்ய க்ஷேத்ரேஷு ஸர்வேஷு தஸ்மைவஶ்ரைஷ்ட்யமீரிதம்" என்று சொல்லுகிறபடியே புண்யக்ஷேத்ரங்களில்வைத்துக்கொண்டு ஶ்ரேஷ்டமுமாய்ப் பாபஹரமுமாய் ஸத்ய வ்ரதக்ஷேத்ரமென்று பேரையுடையதுமான கச்சிவெஃகாவிலே எழுந்தருளி, (உ) "ஶயாநம் ஶேஷபர்யங்கே குந்தேந்துதவளப்ரபே - பணாரத்நஸஹஸ்ராம்ஶு ஸ்வாஸ்தரணவிஸ்த்ருதே - நீலஜீமூதஸங்காஶம் பத்மபத்ராயதேக்ஷணம் - ஸேவ்யமாநோவிஶாலாக்ஷ்யா ஶ்ரீயாகமலஹஸ்தயா - தரண்யாசலநேத்ரக்ஷ்யா தாதாவிஶ்வஸ்யவிஶ்வபுக்" என்றும், "தேவிமாராவார் திருமகள்பூமி" என்றும் சொல்லுகிறபடியே ஸ்ரீபூமிநீளைகளாலே ஸேவ்யமாநனாய்க்கொண்டு "பணங்களாயிரமுடையநல்லரவணைப்பள்ளிகொள்பரமா" என்கிறபடியே பெரியதிருவனந்தாழ்வானை திருவணையிலே *வெஃகாவில் துயிலமர்ந்தவேந்தை ஸேவித்து, பொய்கையாழ்வாரவதரித்தருளின அந்தத்திருப்பொய்கைக்கரையிலே அவரை த்யானம்பண்ணிக்கொண்டு யோகத்திலே எழுநூறு ஸம்வத்ஸரம் எழுந்தருளியிருக்கிற காலத்திலே,

இவர் திருவடிகளிலே கணிகண்ணர் வந்து ஆஶ்ரயித்துப் பகவத்ப்ரவணராயிருக்க, அவ்வளவிலே அங்குள்ள ஒருஸ்தவிரையானவள் வந்து ஆழ்வாரை ஸேவித்து அவர்திருவடிகளிலே பக்தியுக்தையாய் அவர் எழுந்தருளியிருக்கிறவிடத்தை "கடைத்தலை சீக்கப்பெற்

(க) "யத்ஸத்யவ்ரதம் நாம க்ஷேத்ரம் பாபவிநாஶநம் | புண்யக்ஷேத்ரேஷு ஸர்வேஷு தஸ்மை ஶ்ரைஷ்ட்யமீரிதம் ||"

(உ) "ஶயாநம் ஶேஷபர்யங்கே குந்தேந்துதவளப்ரபே | பணாரத்நஸஹஸ்ராம்ஶுஸ்வாஸ்தரணவிஸ்த்ருதே || நீலஜீமூதஸங்காஶம் பத்மபத்ராயதேக்ஷணம் | ஸேவ்யமாநம் விஶாலாக்ஷ்யா ஶ்ரியா கமலஹஸ்தயா || தரண்யா சலநேத்ராக்ஷ்யா தாதாரம் விஶ்வஸ்ய விஶ்வபுக் ||"

ரால் கடுவினைகளையலாம்” என்கிறபடியே ஸம்மார்ஜநகோமயாநுலேபநரங்கவல்யாத்யலங்காரங்களாலே அநுதினம் சுச்ரூஷிக்க, யோகத்திலே எழுந்தருளியிருக்கிற இவ்வாழ்வார் ஒருநாள் திருக்கண்களை விழித்துப்பார்த்து, இவள்செய்கிற கைங்கர்யத்துக்கு மிகவும் உகந்த வுள்ளத்தராய், அந்த வ்ருத்தையைப் பார்த்து ‘உன் அபீஷ்டத்தைச் சொல்லிக்காணாய், உனக்கு ஒருவரப்ரதானம் பண்ணுகிறோம்’ என்று அருளிச்செய்ய, அவளும் அப்படியே ஆழ்வாரைக்குறித்து ‘அடியேனிடத்தில் க்ருபாதிசயமுண்டாகில் அடியேனுக்கு இந்த வார்த்தகம்போம்படி கடாக்ஷித்தருளவேணும்’ என்ன ஆழ்வாரும் ‘அப்படியே ஆகக்கடவது’ என்று அவளைக் குளிரக்கடாக்ஷித்தருள, அவளும் இவர்கடாக்ஷத்தாலே ப்ராப்தயௌவனையாய்த் தேவஸ்த்ரீயைப்போலே அதிஸுந்தரியாக, அவ்வளவிலே, தத்ராஜ்யாதிபதியான பல்லவராயனும் இவளைக்கண்டு, மாமதபாணபாதிதனாய்த் தனக்குப் பத்நியாகவேணுமென்று ப்ரார்த்திக்க, அவளும் அநுகூலித்து அவனுடனே அதிமாநுஷமானபோகங்களை அநுபவியாநிற்க,

ஒருநாள், பல்லவராயன், தனக்கு ஒருநாளைக்கொருநாள் ஶரீரம் ஜீர்த்துவரக் கண்டு, அவளைக்குறித்து ‘உனக்கு அதிமாநுஷமான இந்த யௌவநம் எங்ஙனேயுண்டாயிற்று?’ என்று கேட்க, அவளும் அவனைக்குறித்து ஆழ்வார்கடாக்ஷத்தாலே தனக்கு உண்டானபடியைச் சொல்லி, ‘நீயும் உன்னகத்திலே அநுதினம் உபாதாநம்பண்ணவருகிற கணிகண்ணனை அநுவர்த்தித்து அவர்புருஷகாரமாகத் தத்தேசிகரான பக்திஸாரரை அநுவர்த்தித்தாயாகில், உனக்கும் இப்படிப்பட்ட யௌவநம் உண்டாம்’ என்றுசொல்ல, அப்போது ராஜாவும் கணிகண்ணனையழைத்து, உம்முடைய ஆசார்யரை நாம் ஸேவிக்கவேணும்; அவரை நம்பக்கல் அழைத்துக் கொண்டு வரவேணும்’ என்று சொல்ல, கணிகண்ணரும், ‘நம் ஆசார்யர் ஒருவரகத்துக்கும் எழுந்தருளார். ஒருராஜாவையும் கவிசித்துப் பாடார்’ என்ன, பின்னையும் ராஜாவான பல்லவராயன் தன்னைக்கவி பாடவேணுமென்று கணிகண்ணனை அபேக்ஷிக்க, *வைகுந்தச்செல்வனார்சேவடியைப் பாடுகையொழிய, * “நாக்கொண்டுமானிடம்பாடேன்” என்றும, “வாய்கொண்டு மானிடம்பாடவந்த கவியேனல்லேன்” என்றும் இப்படி தம்முடைய அத்யவஸாயஹேதுவான சிஷ்டாசாரவசநங்களைச்சொல்லி ‘பகவத்பாகவதவிஷயமொழிய நான் ஸ்துதிபண்ணுவதில்லை’ என்ன, ‘ஆகிலும், நீர் நம்மைப்பாடவேணும்’ என்று அவன் இவரை நிர்ப்பந்திக்க, கணிகண்ணரும்

† “ஆடவர்க ளெங்ஙனகல்வா ரருள்சரந்து, பாடகமு மூரகமும் பாம்பணையும் - நீடியமால், நின்று மிருந்தான் கிடந்தானிதுவன்றோ, மன்றூர் ‡ பொழிற்கச்சி மாண்பு” என்று சொல்ல, அவனும் ‘நம்மைப்பாடென்றால் இங்ஙனே சொல்லலாமோ?’ என்று மிகவுங் குபிதனுப்க் கொண்டு ‘ஆகில், நம்முடைய ராஜ்யத்தினின்றும் போம்’ என்ன, (க) “ஆஜ்ஞாமாத்ரேண” என்கிறபடியே சடக்கென ஸ்வாசார்யரான பக்திஸாரமுனிகள் திருமுன்பே வந்து தண்டன் ஸமர்ப்பித்து அச்செய்தியை விண்ணப்பஞ்செய்து ‘அடியேன் இவ்விடத்தில்நின்றும் விடைகொள்ளுகிறேன்’ என்ன, ஆழ்வாரும் ‘நீர் போகிறீராகில், நாம் இங்கிருக்கப்போகிறோமோ? நாம் புறப்பட்டால், எம்பெருமான் இங்குக் கண்வளரப்போகிறானோ? அவனெழுந்தருளும்போது, தத்பரிகரபூதரான ப்ரஹ்மாதிகள் இங்கிருக்கப்போகிறார்களோ?’ என்று அருளிச்செய்து, ‘*வெஃகாவிலுன்னிய யோகத்துறக்கமானவனையும் எழுப்பிக்கொண்டு வருகிறோம்’ என்றுசொல்லி, திருவெஃகாக்காயனர் திருமுன்பே எழுந்தருளி அவரைப்பார்த்து “கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி,மணிவண்ணா நீகிடக்க வேண்டா - துணிவுடைய, செந்நாப்புலவனும்போகின்றேன் நீயுமுன்றன், பைந்நாகப்பாய் சுருட்டிக்கொள்” என்று ஆழ்வார் விண்ணப்பஞ்செய்ய, அவர் சொன்னவண்ணஞ் செய்து இவருடையபின்னே எழுந்தருள, “சுடர்கொள்சோதியைத் தேவரும் முனிவருந்தொடர” என்கிறபடியே மற்றும் அத்தேசத்தில் ஆலயங்களில் தேவதைகளும் பின்தொடர எழுந்தருளுகையாலே, (உ) “அபிவ்ருக்ஷாः பரிம்லாநாः ஸபுஷ்பாங்குரகோரகாः - உபதப்தோதகா நத்ய: பல்வலாநி ஸராம்ஸி ச” என்று சொல்லுகிறபடியே திருவயோத்யை ராமவிச்லேஷத்தாலே பொலிவழிந்தாப்போலே காஞ்சீநகரத்திலே தரு குல்ம லதாதிகளும் நதீதடாகங்களும் மிகவும்வாடி அழகழிந்து தத்ராஜ்யத்தில் கோயில்களில் எம்பெருமான்களுமில்லாதே ஆலயங்களிலே தேவதைகள் ஒருவருமின்றியே அந்தகாரம்நவிந்து உதயாஸ்தமயந் தெரியாதே “கனிரவாய் நீண்டதால்” என்கிறபடியே கததிமிரபூயிஷ்டமானபடியை ராஜாவும் மந்த்ரிகளுங் கண்டு, போர க்லேசித்து இவர்

(க) “[illegible]” (உ) “[illegible]”

† ‘எவ்வா றகன்றொழிவார் வெஃகாவும், பாடகமு மூரகமும் பஞ்சரமா’ என்றும் பாடம். ‡ ‘மதிற்கச்சி’ என்றும்பாடம்.

களைப் பின்தொடர்ந்துசென்று, † 'ஓரிரவிருக்கை' என்கிற ஊரிலே இவர்களைக் கண்டு கப்படத்தைக்கட்டிக் காலிலேவிழுந்து கணிகண்ணனை வேண்டிக்கொள்ள, கணிகண்ணனும் மீண்டெழுந்தருளும்படி ஆழ்வாரை வேண்டிக்கொள்ள, ஆழ்வாரும் மீண்டெழுந்தருளத் திருவுள்ளமாய் ஆஶ்ரிதபாரதந்த்ர்யான சொன்னவண்ணஞ்செய்த பெருமாளைப்பார்த்து, "கணிகண்ணன்போக்கொழிந்தான் காமரு பூங் கச்சி, மணிவண்ணா நீகிடக்கவேண்டும் - துணிவுடைய, செந்நாப்புலவனும் போக்கொழிந்தேன் நீயுமுன்றன், பைந்நாகப் பாய்படுத்துக்கொள்" என்று விண்ணப்பஞ்செய்ய, எம்பெருமானும் மீண்டெழுந்தருளி, ஆழ்வார்சொன்னவண்ணஞ்செய்தது எல்லார்க்கும் ப்ரத்யக்ஷமாகவேணுமென்று இடத்திருக்கை கீழ்படக் கண்வளர்ந்தருளினார். இப்படி "திருப்புடையவெஃகாவேசேர்ந்தானை" என்கிறபடியே சேர்ந்து * நாகத்தணையைப் படுக்கையாகப்படுத்துக்கொண்டு கண்வளர்ந்தருளின இந்தஸௌலப்யத்தை அநுஸந்தித்தே "வெஃகணைக்கிடந்த தென்னநீர்மையே!" என்று ப்ரீதராயருளினார். அந்த நகரிதானும் "நிறைந்தசீர்நீள்கச்சி" என்னும்படி பொலிவையுடைத்தாயிருக்கையாலே, அவ்விடத்திலே * வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்தினை உள்ளத்துக்கொண்டு யோகத்திலே பின்னையும் சிலகாலம் எழுந்தருளியிருந்து,

அநந்தரம், கும்பகோணயாத்ராபேக்ஷையை யுடையராய் (க) "போகா: கும்பகோணேசஸமீக்ஷணார்த்தமபிதிஷ்டதி - காந்த்தஸ்ய வைகுண்டக்ஷேமதாக்யாவிபூதய:" என்கிறபடியே * வைகுந்தமாநகர்மற்றதுகையதுவாகத்தக்க ப்ரபாவாதிஶயத்தையுடைத்தான திருக்குடந்தையிலே நித்யவாஸம்பண்ணி ஆராவமுதாழ்வாருடைய * ஏரார்கோலத்தை யோகத்திலேகொண்டு எழுந்தருளியிருக்கத் திருவுள்ளமாய், "கலத்தால்மிக்கார் குடந்தைக்கிடந்தா யுன்னைக்காண்பான் கானலப்பாய்" என்கிறபடியே அதித்வரையோடே எழுந்தருளாநிற்கச்செய்தே, பெரும்புலியூரென்கிற க்ராமத்திலே சென்று ஒரு திண்ணையிலே அவஸரித் தெழுந்தருளியிருக்க, அத்திண்ணையிலேயிருந்து அத்யயநம்பண்ணுகிற ப்ராஹ்மணர்கள் இவரைக்கண்டு விப்ரதிபத்திபண்ணி வேதாத்யயநத்தைத் தவிர்ந்திருக்க, பின்னை அவர்களுக்குவிட்டதுறுவாய்தோன்றாமல் தடுமாற, ஆழ்வாரும் அந்தைக்

(க) "போகநாதோ கோணஸம்பக்ஷணாய ஹேவிதிஷ்டதி | காந்த்யஸ்ய வைகுண்டக்ஷோமதாக்யாவிபூதய: ||"

† 'ஓரிருக்கை' என்றும், 'ஓரிக்கை' என்றும் வழங்குவர்.

கண்டு கறுப்புசெல்லை உகிராலேபிடர்ந்து ஸம்ஜ்ஞையாலே அந்த வாக்யத்தை ஸூசிப்பித்தருள, பின்பு அவர்களுக்கு (க) "க்ருஷ்ணாநாம் வ்ரீஹீணாம்நகநிர்ப்பிந்நம்" என்கிற வாக்யமதோற்ற, (உ) "ஸூசீத்ராபகவத்பக்தா விப்ராபாகவதாஸ்ஸ்ம்ருதா:" இத்யாதிப் படியே அவர்கள் தெளிந்துவந்து தண்டன்ஸமர்ப்பித்து க்ருதார்த்த ரானார்கள்.

பின்னையும் அந்தக்ராமார்ச்சனையான எம்பெருமானும் இவ்வாழ்வார் உபாதாநார்த்தமாக ஸஞ்சரித்தருளுகிற திருவீதிகள்தோறும் அபிமுகமாய்த் திரும்பியருள, இந்த ஆச்சர்யத்தை நம்பியார் கண்டு, சில ப்ராஹ்மணர்க்குக் காட்ட, அவர்கள் அந்தக்ராமத்திலே யாகம் பண்ணுகிற பெரும்புலியூரடிகளுடைய யாகசாலையிலே சென்று "கண்டோம் கண்டோம் கண்ணுக்கினியன கண்டோம்" என்று இவருடைய ப்ரபாவத்தைச் சொல்ல, தீக்ஷிதரும் கேட்டு "மெய்யடியார்கள் தம் ஈட்டம் கண்டிடக்கூடுமேல் அதுகாணுங்கண்பயனாவதே" என்றுகொண்டு (ங) "அக்ஷ்ணோ:பலம் த்வாத்ருஸதர்ஸநம்" என்று சொல்லுகிறபடியே அதிஹர்ஷத்துடன் யாகசாலையினின்றும் புறப்பட்டு ஆழ்வாரெழுந்தருளி யிருக்குமிடத்தேறவந்து இவருடைய சக்தி பஞ்சமயமான விக்ரஹத்தைக் கண்டு ஸேவித்து, "போதுமினெமதிடம் புகுதுக" என்கிறபடியே நம்முடைய யாகசாலைக்கு எழுந்தருளவேணுமென்று விண்ணப்பஞ் செய்து எழுந்தருளுவித்துக்கொண்டுபோய் இவ்வாழ்வாருக்கு அக்ரபூஜைபண்ண, அத்தைக் கண்டு அங்குள்ள அத்வர்யுதொடக்கமான சடங்கிகளடைய 'இவரைக் கொண்டுபுகுந்து யாகத்தை உபஹதியாக்கிற்றே!' என்று தர்மபுத்ரன் ராஜஸூயயாகத்திலே க்ருஷ்ணனுக்கு அக்ரபூஜை பண்ணினபோது சிசுபாலன் பஹுமுகமாகப் பருஷோக்திகளைப் பண்ணினாப்போலே இவர்களும் ஆழ்வாரைப் * பொறுப்பரியனகள்பேசி அதிக்ஷேபிக்க, தீக்ஷிதரும் வ்யாகுலாந்த:கரணராய் ஆழ்வாரைப்பார்த்து, 'இவர்கள் * ஏதேனும்பேச நான் கேட்கமாட்டேன்' என்று விண்ணப்பஞ் செய்ய, ஆழ்வாரும் இனி நம்மை வெளியிடாதிருக்க வொண்ணாதென்று பார்த்து, (ச) "அஷ்டாங்கயோகஸித்தாநாம் ஹ்ருத்யாக

---

(க) "[illegible]" (உ) "[illegible]" (ங) "[illegible]" (ச) "[illegible]"

நிரதாத்மகாம் - யோகிநாமதிகாரஸ்ஸ்யா தேகஸ்மிந்ஹ்ருதயேபஹ்யே' என்கிறபடியே தமக்கு அந்தர்யாமியாய் * அற்புதனான அநந்த சயனனைக்குறித்து "அக்கரங்களக்கரங்களென்று மாவதென்கொலோ, இக்குறும்பைநீக்கியென்னையீசனாக்கவல்லையேல், சக்கரங்கொள்கையனே சடங்கர்வாயடங்கிட, உட்கிடந்தவண்ணமே புறம்பொசிந்து காட்டிடே" என்று விண்ணப்பஞ்செய்தருள, * ஒண்சங்கதைவாளாழியானும் "தம்மையேநாளும் வணங்கித் தொழுவார்க்குத், தம்மையேயொக்கவருள்செய்வர்" என்கிறபடியே * அரவத்தமளியினோடும் அழகியபாற்கடலோடும் அரவிந்தப்பாவையுந்தானுமாயப் பெரியதிருவனந்தாழ்வான்மேலே * வடிவிணையில்லாமலர்மகள் மற்றைநிலமகள் மெல்லடிபிடிக்கும்படி கண்வளர்ந்தருளும்படியை அவ்வருங் கண்டநுபவிக்கும்படி ஆழ்வாருடைய திருமேனியிலே ப்ரத்யக்ஷமாக்கி இவருக்கு ஸாரூப்யப்ரதாநம்பண்ணியருள, இவரும் ஸாரூப்யத்தைப் பெற்று எல்லாருங்காணலாம்படி எழுந்தருளியிருக்க, முன்பு கர்ஹித்த சடலிகளடைய ஆழ்வாருடைய ஹ்ருதயத்தில் ப்ரகாசிக்கிற எம்பெருமானுடைய திவ்யமங்களவிக்ரஹத்தை இவர் உரஸ்ஸிலே ப்ரத்யக்ஷமாக ஸேவித்துத் திருவடிகளிலே ஸாதரமாக ஸாஷ்டாங்க ப்ரணாமத்தைப்பண்ணி க்ஷமைகொண்டு ஆழ்வாரை ப்ரஹ்மரதம் பண்ணி உபலாளித்து "க்ஷமாமி"க்கு லக்ஷ்யமாகாமல் * திருமாலடியார்களைப் பூசிக்கநோற்று க்ருதார்த்தரானார்கள். ததநந்தரம் இவரும் அவர்களுக்கு பஹுப்ரகாரமாக ஜ்ஞாநப்ரதாநம்பண்ணி பஹுவிதக்ருபைசெய்தருளி வாழ்வித்து, * செழுமாமணிகள் சேருந் திருக்குடந்தையை நோக்கி எழுந்தருளினர்.

அநந்தரம் நிஜஸம்புடஸூக்திகளைத் திருக்காவேரீபய:ப்ரவாஹத்திலே ப்ரக்ஷேபிக்க, ப்ரதிகூலப்ரவாஹத்தாலே நிஜஸம்புடஸூக்திகள் நிமக்நங்களாயுள்ளவளவில், நான்முகன் திருவந்தாதியும் திருச்சந்தவிருத்தமும் என்கிற திவ்யப்ரபந்தங்கள் எதிர்த்துவந்து ஆழ்வார் திருவடிகளண்டையிலே யிருக்க, அவற்றையெடுத்துக்கொண்டு ஆராவமுதாழ்வாருடைய * ஏரார்கோலத்தையுங்கண்டு அவ்வநுபவஜநித ப்ரீத்யதிசயத்தாலே "காவிரிக்கரைகுடந்தையுள் கிடந்தவா றெழுந்திருந்துபேசு" என்று விண்ணப்பஞ்செய்ய, ஆராவமுதாழ்வாரும் அப்படியே உத்யோகிக்க, அந்த ஸௌலப்யகுணத்துக்குத் தோற்று "வாழி கேசனே" என்று மங்களாஸாஸநம்பண்ண, எம்பெருமானும் அப்படியே உத்தாநசாயியாயருள, அப்படியான விக்ரஹத்தை த்யாநம்பண்ணிக்கொண்டு யோகத்திலே இரண்டாயிரத்து முந்நூறு ஸம்

க்ஷேத்ரமத்யே பணிபதிஸ்ஸேஷோஜகச்சேஷிணீத்யாக்யாதும் ஐகதாம்ஹி நாயகமப்யூத் ராமாநுஜார்யோமுநி:" என்றும்சொல்லுகிறபடியே அநேக அவதாரவிசேஷமென்று ஆதரித்துக் கொண்டிருந்தார்கள்.

இத்தால், ஏவம்விதமாஹாத்ம்ய யுக்தரான இவருடைய வைபவமும், (க) "சரிதம் ரகுநாதஸ்ய சதகோடிப் ப்ரவிஸ்தரம்" என்கிற சக்ரவர்த்தித் திருமகன் வைபவம்போலே அவாங்மநஸகோசரமிறே. ஸாகரத்தைக் கைக்கிச்சாலே கடந்து அக்கரையேறினாலும், உததியைச் சிறங்கித்தாலும் உடையவர் வைபவம் அடையச் சொல்லப் போகாதிறே. யதாமதி யதாஸ்ருதமாகச் சொன்ன இத்தனை. பஹுஸ்ருதராய்ப் புத்திபாஹுள்யமுடைய பெரியோர்கள் விஸதமாகக் கண்டு கொள்ளக்கடவதிறே.

† இப்படி அவதாரவிசேஷமான இவருக்கு (உ) "ஸார்த்தம் வ்யதீயாய ஸவிம்ஸமதிகம்ப்ரயோ:" என்கிறபடியே நூற்றிருபத்தஞ்சிலே நூற்றிருபது திருநக்ஷத்ரம் பூர்ணமாய்த்து.

"வையமன்னி வீற்றிருந்து விண்ணுலாள்வர் மண்ணூடே" என்னும்படியான இவர், தம்முடைய அவதார ரஹஸ்யஜ்ஞாநத்தாலும், தம்முடைய சிக்ஷாஹேலையாலும், தத்ப்ரதக்ஷிணநமஸ்காராதிகளாலும், சதுராக்ஷரியாய்ச் சதுரமான தம்முடைய திருநாம வைபவத்தாலும், ஸ்வதிவ்யமங்களவிக்ரஹத்யாநத்தாலும் தத்ஸந்நிஷ்டையாலும், தத்கைங்கர்யபரதையாலும், பாஷ்யாம்ருத ப்ரதாநாதிகளாலும், மந்த்ரார்த்தப்ரதாநாதிகளாலும், ததர்த்தப்ரதிபாதநத்தாலும், ஸ்வபாதுகாப்ரதாநத்தாலும், ஸ்வபாததீர்த்தஸ்வீகாரத்தாலும், ஸ்வபாவநமான ப்ரஸாதஸ்வீகாரத்தாலும், பாதஸ்பர்ஸபவித்ரதையாலும், ஸஞ்சாரபூதமான பாதஸஞ்சாரணத்தாலும், ஸ்வபாவந கரஸ்பர்ஸத்தாலும், அப்படியேயான கடாக்ஷவிசேஷத்தாலும், பஞ்சஸம்ஸ்காராதிகளாலுண்

(க) சரிதம் ரகுநாதஸ்ய சதகோடி ப்ரவிஸ்தரம்

(உ) ஸார்த்தம் வ்யதீயாய ஸவிம்ஸமதிகம் ப்ரயோ:

† இத்தப்பாரா தொடங்கி உகக-ஆம் பக்கத்து முதலில் வருகிற 'உடையவரும்' என்பது வரையிலுமுள்ள க்ரந்தங்கட்குப் பதிலாக, சில ப்ரதிகளில் 'ஒருகால் உடையவர் திருவுள்ளத்தில் ஆர்த்தியோடே விசாரித்தருளி நம்பெருமாளைத் திருவடி தொழுது விண்ணப்பஞ்செய்தபடி.' என்று பாடங் காண்கிறது.

டான ஸம்பந்த விசேஷத்தாலும், (க) "புக்திபுவகப்யஸ்ய பாதாஸ்ரிதபதாஸ்ரிதா: - கடாக்ஷாதிபிரேவாத்ர" என்ற ஸ்வகீயஸம்பந்தத்தாலும், (உ) "பாலமூகஜடாந்தாஸ்ச பங்கவோபதிராஸ்ததா-ஸதாசார்யேணஸந்த்ருஷ்டா:ப்ராப்நுவந்திபராங்கதிம்" என்றும் (ங) "ஸாக்ஷாந்நாராயணோதேவ: க்ருத்வாமர்த்யமயீந்தநும்-மக்நாநுத்தரதேலோகாந் காருண்யாச் சாஸ்த்ரபாணிநா" என்றும் (ச) "அஸ்யாதபிசைகஸ்ய ஸம்பந்தஸ்ஸ்தாதம தோஹமேவ - ஸர்வஏவப்ரமுச்யேரந்யா: பூர்வேபரேததா" என்றும், (ரு) "பரமாத்மதஷ்யஃபக்தீவா யேசவைஷ்ணவஸம்ஸ்ரயா: தேஸைவேத பாயாஸ்யந்தித் விஷ்ணோ: பரமம்பதம்". என்றும் சொல்லுகிறபடியே ஏதேனுமொருவனுள்ளதொரு ஸ்வஸம்பந்த விசேஷத்தாலும், ஜ்ஞாநாஜ்ஞாநருவிபாகமற ஜகத்தையெல்லாம் உஜ்ஜீவிப்பித்தும், இனிமேலும் ஸ்வஸம்பந்திகளாயுள்ளவர்களை "ஆரியர்காள் கூறும்" என்று நியமித்தும் இப்படி அவதாரகார்யம் தலைக்கட்டினவாறே;

அங்கே * அயர்வறும் அமரர்களோடுகூடி அடிமைசெய்யத் திருவுள்ளமாய்,—* சேணுயர்வானத்திருக்குந்தேவபிரானும், * அயர்வறுமமரர்களதிபதியாய், 'பரம்பனே மேலாற்கு—பலபலவேயாபரணம்' என்னும்படி * பன்மணிப் பூணாத்தையுமுடையனும், "உடையார்ந்த வாடையன்" இத்யாதிப்படியே * கொடியாவுடைத்திருவாரணனும், * அரவினணையம்மானும், * எழில்மலர்மாதருந்தானும் இருபம்பயக்க இனிதுடன்வீற்றிருந்து அமர்ந்து * கூந்தல்மலர்மங்கைக்கும் மண்மடந்

(க) [illegible]

(உ) [illegible]

(ங) [illegible]

(ச) [illegible]

(ரு) [illegible]

ணைக்குங் கேள்வனைப் *எழுலகுந்தனிக்கோல்செல்ல, இப்படி "நண்ணொடியாள் திருமகளும்நீயும்" என்னும்படி நித்யபோகமாயுள்ள போக விபூதியில் அம்பிராட்டிசேர்ந்திருந்து எழுந்தருளியிருக்கிற அவ்விருப்பிலே *தேவிமாராவார் திருமகள் பூமி ஏவ மற்று அமரர் ஆட்செய்ய, *கருளப்புட்கொடிச் சக்கரப்படை வானநாட செங்கார்முகில்வண்ணனாய் *வைகுந்தங்கோயில்கொண்டெழுந்தருளியிருக்கிற ஸ்ரீவைகுண்டநாதனுக்கு, "*சென்றால் *வரும்பிவாலதாலபேதங்கொண்டு *வழுவிலா அடிமைசெய்யவேண்டும்' என்று அவிச்சிந்நமநோரதத்தையுடையராய், அது செய்யுமிடத்து '*முகப்பே கூவிப்பணிகொள்ளவேணும்; *செம்மாபாதபற்பத்தலைசேர்க்கவேணும்; *ஈறில் இன்பத்திருவெள்ளத்திலே மூழ்கவேணும்; *தாமரைக்கண்களாலே குளிரநோக்கவேணும்' என்றாப்போலே சில பரிமாற்றங்களை ஆசைப்பட்டு, "வானோர் சோதி மணிவண்ணா! மதுசூதா! நீ அருளாய் உன், தேனே மலரும் திருப்பாதஞ் சேருமாறு வினையேனே" என்றும், "இமையோர்கள்குழாம் தொழுவதுஞ் சூழ்வதுஞ் செய் தொல்லைமாலைக் கண்ணாரக்கண்டு, கழிவதோர் காதலுற்றார்க்கு மூண்டோ கண்கள் துஞ்சுதலே" என்றும் சொல்லுகிறபடியே கண்ணழிவற்ற ப்ராப்யத்வரையையுடையராய், அத்தை *ஆராதகாதலையுடைய ஆழ்வார் அர்த்தித்தபடியே இவரும் அத்தை அடியொற்றிக்கொண்டு,—(க) "ஸ்ரீமத்வைகுண்டே திவ்யலோகே" என்று தொடங்கி (உ) "ஆத்மாநுரூபயா ஸ்ரீயாஸஹாஸீநம்" என்றும், (ங) "ப்ரத்யக்ரோந்மீலிதஸரஸிஜஸத்ருசநயநயுகளம்" என்றுதொடங்கி (ச) "தத்க்ஷணோந்மீலிதபுண்டரீகஸத்ருசசரணயுகளம்" என்னுமளவும் *இணைப்பாதங்களின் இடையிலுண்டானவற்றின் வடிவழகுகளையும், அநந்தரம் அதிமநோஹர கிரீட மகுட நூபுராந்தமாக *முடிச்சோதி தொடங்கி* அடிச்சோதியளவும் சாத்தின திருவணிகலங்களின் அழகையும், (ரு) "ஸ்ரீமத்வைஜயந்த்யா வநமாலயா விராஜிதம்" என்று கீழ்திருவாபரணமோ

(க) ஸ்ரீமத்வைகுண்டே திவ்யலோகே ।

(உ) ஆத்மாநுரூபயா ஸ்ரியா ஸஹாஸீநம் ।

(ங) ப்ரத்யக்ரோந்மீலித ஸரஸிஜஸத்ருசநயநயுகளம் ।

(ச) தத்க்ஷணோந்மீலித புண்டரீகஸத்ருசசரணயுகளம் ।

(ரு) ஸ்ரீமத்வைஜயந்த்யா வநமாலயா விராஜிதம் ।

யைக்குப் ப்ரபைபோலவும் அதின் காந்திபூரம் நிறம்பெற வெள்ளமிட்டாற்போலவும் இருக்கிற *மங்கலகல்வக மாலையையும், மேலில் ஆபரணத்தோபாதியாயிருக்கிற "அணியாராழியுஞ்சங்கமும்" என்னும்படியான ஶங்க சக்ர கதா அஸி ஶார்ங்காதிகளாயுள்ள *அமர்கொள் ஆழி சங்கு வாள் வில் தண்டாதி பல்படைகளையும், (க) "ஸ்ரீமதி வைகுண்டே" என்று தொடங்கி (உ) "பகவத்பரிசர்யைகபோகைர் நித்யஸித்தைரனந்தைः" என்னுமளவும் *அமரர்கோன் அர்ச்சிக்கின்ற அங்ககப்பணிசெய்வர் விண்ணோர்களையும், அதற்குமேலே (௩) "திவ்யாமலகோமலாவலோகநேந விஶ்வமாஹ்லாதயந்தம்" என்று தொடங்கி *வானிடமருங்குளிர்விழிகளாலே குளிர நோக்கும்படியையும், *பன்னிலா முத்தந்தவழ்கதிர்முறுவல்செய்து *சோதிவாய்திறந்து திவ்ய லீலாலாபாம்ருதங்களாலே அகிலஜநங்களையும் ஆநந்திப்பித்துத் தளிர்ப்பிக்கும்படியையும், (௪) "பகவந்தம் நாராயணம் த்யாநயோகேந த்ருஷ்ட்வா" என்று ப்ராப்ய பக்தியோகரீதியாலே *பகற்கண்டேன் நாரணனைக்கண்டேனென்று காணும்படியையும், (௫) "நித்யதாஸ்யஞ்சயாதாவத்ஸ்திதம் அநுஸந்தாய" என்று "அடியேனுடைமைதன் முதல் முன்னமே" என்கிற ஸ்வாபாவிக ஸம்பந்தத்தை அநுஸந்திக்கும்படியையும், (௬) "கதாऽஹம் பகவந்தம் நாராயணம் ...... ஸாக்ஷாத்கரவாணி சக்ஷுஷா" என்று "மாண்குறள்கோலப்பிரான் மலர்த்தாமரைப்பாதங்களை - காண்பது எஞ்ஞான்றுகொலோ" என்றும், "மைகொள்மாம் பேரியுறை மாலே! உன்னை, மெய்கொள்ளக் காணவிரும்பும் என்கண்களே" என்றும் சக்ஷுஸ்ஸுக்களாலே ப்ரத்யக்ஷஸாக்ஷாத்காரம் பண்ணும்படியையும், (௭) "கதாऽஹம் பகவத்பாதாம்புஜத்வயம் ஶிரஸா ஸங்க்ரஹீஷ்யாமி" என்று "திருவல்லவாழ் நகருள் நின்றபிரான், அடிநீறு அடியோங்கொண்டு சூடுவது - என்றுகொலோ" என்றும், "உலகு

(க) ஸ்ரீமதி வைகுண்டே (உ) பகவத்பரிசர்யைகபோகைர்நித்யஸித்தைரநந்தைः। (௩) திவ்யாமலகோமலாவலோகநேந விஶ்வமாஹ்லாதயந்தம்। (௪) பகவந்தம் நாராயணம் த்யாநயோகேந த்ருஷ்ட்வா। (௫) நித்யதாஸ்யஞ்சயாதாவஸ்திதம் அநுஸந்தாய। (௬) கதாऽஹம் பகவந்தம் நாராயணம்... ...ஸாக்ஷாத்கரவாணி சக்ஷுஷா। (௭) கதாவாऽஹம் பகவத்பாதாம்புஜத்வயம் ஶிரஸா ஸங்க்ரஹீஷ்யாமி।

படைத்துண்ட வெண்ணை அறைகழற்சுடர்ப்பூந்தாமரை சூடுதற்கு அவா" என்னும் சொல்லுகிறபடியே பாதாரவிந்தங்களை ஶிரோபூஷணமாகத் தரிக்கும்படியையும், (௧) "கதாzஹம்பகவத்பாதாம்புஜத்வயபரிசர்யாஶயா" என்று தொடங்கி (௨) "தத்பாதாம்புஜத்வயம்ப்ரவேக்ஷ்யாமி" என்னுமளவாகப் *பாதமடைவதன்பாசத்தாலேமற்றவன் பாசங்கள் முற்ற விடும்படியையும், *திருவடிக்கீழ்க் குற்றேவல் செய்யும்படியையும், (௩) "கதாமாம்பகவாந் அதிஶீதலயாஸ்வகீயயாத்ருஶாzவலோக்ய" என்று தொடங்கி மேல் எல்லாவற்றுக்கும் பக்கம் நோக்கறியாதே * அமலங்களாக விழிக்கும்படியையும், * மூகப்பே கூவிப் பணிகொள்ளும்படியையும் அநுஸந்தித்துத் *திருவடிக்கீழ்க் குற்றேவல்செய்யப் பெரியகாதலையுடையராய், அத்தாலே "அடியேனடைந்தேன்" என்னும்படி மாநஸமாகக்கிட்டி,—(௪) "ஜிதாதேவ" என்று தொடங்கி அப்பேரோலக்கத்தைத் தாக்கண்டு ஸேவிக்கும்படியையும், * அணைவதரவணைமேற் பூம்பாவையாகம்புணருமவனை * இமையோர்கள் குழாம் தொழுவதுஞ் சூழ்வதுஞ் செய்தொல்லைமாலைக் கண்ணாலே காணும்படியையும், "உற்றேன் உகந்து பணிசெய்து உனபாதம், பெற்றேன் ஈதே இன்னம்வேண்டுவது எந்தாய்" என்று மீளவும் பஹுமநோரதங்களைப் பண்ணிநின்றுகொண்டு *வாசலில் வானவர் அநுமதியுடனே உள்ளேபுகும்படியையும் மநோரதித்து, " அடைந்தேன் உன்திருவடியே " என்று அவனைக்கிட்டி, (௫) "நாராயணாயநம:" என்று *வழுவிலாவடிமையை அர்த்தித்துத் தத்ஸித்திக்கு "அடியேனுடையாவி யடைக்கலமே" என்று ஆத்மாவை நிவேதிக்க, அவனும் குளிர்விழிகளாலே கரையழியும்படி கடாக்ஷிக்க, "*எது எது என்பணி?" என்னாத எல்லாவடிமைகளுஞ் செய்ய ஒருப்பட்டு "கைகளாரத்தொழுது தொழுது" "இரங்கி நீர்தொழுது" என்னும்படி ப்ராஞ்ஜலிபுடராய் அநுபவியாநின்று கொண்டு,—அத்யந்தம் ப்ரீதியுக்தனாய்ப் ப்ரீதிப்ரகர்ஷத்தாலே *கோணை

(௧) கதாzஹம் பகவத்பாதாம்புஜத்வயபரிசர்யாஶயா । (௨) தத்பாதாம்புஜத்வயம் ப்ரவேக்ஷ்யாமி । (௩) கதா மாம் பகவாந் அதிஶீதலயா ஸ்வகீயயா த்ருஶாzவலோக்ய । (௪) ஜிதாதேவ (௫) நாராயணாய நம: ।

வாய் அடிப்ப மழைக்கண்ணுடன் நிற்கும்படியையும், (க) "நீதர பழவதர" என்று தொடங்கி (௨) "அம்ருத ஸாகராந்தர் நிமக்ந ஸர்வா வயவஸ்ஸுகமாஸீத" என்று மீளவும் *காமனைக்கண்களாலே அவலோகநதாநம் பண்ணும்படியையும் அபேக்ஷித்து, *சோதிச்செவ்வாய்முறுவல் அவலோகியா அஸாதிருக்கது: இப்போது ஸவிலாஸஸ்மிதத்தாலே அலர்ந்து (௩) "ஆநயைநம்" என்று அளிட்டமையாதே தானே வாவென்று அழைத்து, "துயராறுசுடரடி" என்றும் "பாதபங்கயமே தலைக்கணியாய்" என்றும் சொல்லும்படியான *கமலமன்ன குரைகழல்களை "தலைசேர்த்து", "தன்தாளிணைக்கீழ்ச் சேர்த்து" என்னும்படியே பாதோபதாநம்போலே சேர்த்தருளவேணும்; *மாயன் கோலமலரடிக்கீழ்ச் சுழிபட்டோடுஞ் சுடர்ச்சோதி வெள்ளமான அமுதவெள்ளத்து *இன்பத்திரு வெள்ளத்திலே "ஆழ்ந்தனிற் பெரிய என் அவா" என்னும்படி அவகாஹித்து, இங்கே மோஹாபிகர்மிதமான மாத்ரங்களாலே தாபத்ரயங்கள் போலன்றிக்கே, அங்கே நிரதிசயஸுகத்தை அநுபவிக்கவேணும்' என்று ஸ்ரீ வைகுண்டகத்யத்திலே அர்த்தியா நின்றுகொண்டு; பரமபக்தி தலையெடுத்துப் பெரிய அபிநிவேசத்துடனே பெரியபெருமாள் ஸந்நிதியிலே எழுந்தருளிப் பெரியபிராட்டியாரைப் புருஷகாரமாக முன்னிட்டுக்கொண்டு பெரியகத்யமான சரணாகதிகத்யத்தைப் பெரிய ஆற்றாமையோடே திருவுள்ளத்திலேபடும்படி விண்ணப்பஞ்செய்து சரணம்புக்கு; அநந்தரம் ஸ்ரீரங்ககத்யத்தையும் விண்ணப்பஞ்செய்து அத்தலையிலுண்டான ஸர்வ சக்தித்வாதி கல்யாண குணங்களையும் தம்முடைய அஜ்ஞாநசக்தி முதலான அவத்குணங்களையும் ஆவிஷ்கரித்து, ஆகிஞ்சந்யத்தையும் அறிவியாநின்றுகொண்டு சரணம்புக்கு அத்யார்த்தராய் நிற்க, பெரியபெருமாளும் இவரபிப்ராயமறிந்து 'உமக்கு வேண்டுவதென்?' என்று வினவியருள,

உடையவரும் 'ஸம்ஸாரத்தில் அருசிபிறந்து வய:பரிணாம காலாதிக்ரமணமும் பிறந்தது' என்று விண்ணப்பஞ்செய்ய பெருமாளும் 'காலத்துக்கு காரணம் நாமன்றோ கடவோம்? இன்னம் சிறிது காலம் உம்மைக்கொண்டு இவ்வுலகந் திருத்தப் பார்த்தோம்; அறப் பதறினீர்!'

(க) த்வேதாஹமவந்தா। (௨) அம்ருதஸாகராந்தர் நிமக்ந ஸர்வாவயவஸ்ஸுகமாஸீத। (௩) ஆநயைநம்।

என்று திருவுள்ளம் உடைகுலைப்பட்டு 'இனி உமக்குச் செய்யவேண்டு வது என்?' என்று கேட்டருள, அதுக்கு உடையவரும் 'அடியேனைக் *காலக்கழிவு செய்யாமல் *உன்பொன்னடிசேர்த்து ஒல்லை வேறே போக எஞ்ஞான்றும் விடாதொழியவேணும்' என்ன, பெரியபெருமா ளும் உகந்து (க) "சதுர்த்தசேஹ ஸம்பூர்ணே" என்று *காட்டட லாகத் தம்பிக்கு இட்டதாகாமல் (உ) "ஸப்தாஹம் ஜீவிதாவதி" என் றபடியே (ங) "கர்மபாஶப்ரக்ருதித:" என்ற இவர்க்கு 'இற்றைக்கு ஏழாநாள் அப்படியே செய்கிறோம்' என்ன, உடையவரும் '*நம் முடைய வாழ்வு வாய்க்கின்றவா!' என்று ஹர்ஷப்ரகர்ஷத்துடன் 'என்னுடைய ஸம்பந்தஸம்பந்திகளெல்லாரும் நான் பெற்ற லோகம் பெறவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் 'அப்படியே பெறக்கடவர்கள்' என்று திருவாய்மலர்ந்தருளி, உடையவர்க்குத் தீர்த்தம் திருமாலை திருப்பரியட்டம் *பூவார்கழல் ப்ரஸாதம் ப்ரஸா தித்தருளி விடைகொடுத்தருள, இவரும் 'மஹாப்ரஸாதம்!' என்று ஸார்வபௌமரான ராஜாக்கள் பக்கல் நின்றும் நாடுபெற்றவர்கள் பெரிய ப்ரீதியோடே ராஜபவநத்தில் நின்றும் புறப்படுமாபோலே *பொங்கோதஞ்சூழ்ந்த புவனியும்விண்ணுலகும் அங்காதுஞ்சோராமே ஆள்கின்ற எம்பெருமான் செங்கோலுடைய திருவரங்கச்செல்வனான ஸ்ரீரங்கராஜர்பக்கல்நின்றும் திருநாடாகிற மஹாராஜ்யத்தைப்பெற்று அந்தராஜகுலமாஹாத்ம்யத்தாலேவந்த ப்ரீதியுந்தானே கொண்ட ஸ்ரீரங்க ராஜதானியிலும் புறப்பட்டு மடமே யெழுந்தருளி அனைத்துக்கொத்தி லுண்டானவர்களையுங் கித்தமகிழ்ச்சியுடன் அனுப்பியருளி, ஶிஷ்யவர்க் கங்களாயுள்ளவரெல்லார்க்கும் ஒருகாலும் அருளிச்செய்யாத 'அர்த்த விசேஷங்களையெல்லாம் மூன்றுநாளாக ப்ரஸாதித்தருளி 'இவ்வர்த்தங் களையெல்லாம் நீங்களும் விஶ்வஸித்து உங்களைப்பற்றினார்க்கும் பரம் பரையாய் உபதேஶித்துப் போருங்கோள்' என்று அருளிச்செய்ய, முதலிகளெல்லாரும் அதிஶங்கைபண்ணி 'இது என்?' என்று விண் ணப்பஞ்செய்ய, 'இனி ஒளிக்கவொண்ணாது' என்று திருவுள்ளம் பற்றி 'இற்றைக்கு நாலாநாள் பெரியபெருமாள் திருவடிகள் ஏறப் போக நினையாநின்றோம்' என்று அருளிச்செய்தருள, இத்தைக்கேட்டு

(க) [illegible] । (உ) ஸப்தாஹம் ஜீவிதாவதி । (ங) [illegible] ।

முதலிகளெல்லாரும் கடல்கலங்கினாற்போலே கலங்கி 'உடையவர் விஶ்லேஷத்திலே ஆத்மத்யாகம் பண்ணக்கடவோம்' என்று தேறியிருக்கமையைத் திருவுள்ளம்பற்றியருளி, உடையவரும் 'வாரீர்கோள் முதலிகாள்! நம்முடைய விஶ்லேஷத்தில் ஆத்மத்யாகம்பண்ணினாருண்டாகில், பெரியநம்பி ஆளவந்தார் ஸ்ரீபாதமே! நம்மோடு அவர்களுக்கு ஸம்பந்தமில்லையாய் நித்ய ஸூரிக ளோலக்கத்திலும் புகுரப்பெறாதே, நம் சடகோபர் திருவுள்ளத்தையும் மறுத்தவர்களாய் அதஃபதிக்கக்கடவீர்கள்' என்று † அருளிச் செய்து அவர்களைத் தேற்றித் தரிக்கப்பண்ணினார்.

அனந்தரம் (க) "அத்யைவாஹங்கமிஷ்யாமி லக்ஷ்மணேந கதாங்கதிம்" என்கிறபடி தாமும் ஆழ்வான்வழியே பின்சென்று (உ) "இத்தம்ப்ராப்தே ஸப்திபரமவ்யோம ஶிஷ்டாக்ரகண்யேகூராதீஶேஸஹிமமஶிகரல்யாக்ரியாலம்படத்வம் - ஶிஷ்யஸ்தோமாக்ஶ்ருதிகுருமுகோகங்கார்யேணாஸாகம்விர்யஸ்யோச்சை꞉ பரமகமதாரோடு மைச்சத்யதீக்த꞉" (ங) "காஸாராதிமதிவ்யஸூரிக்ருதிஸத் ஸோபானபத்தாம்த்வய ஸ்ரீமத்ரோபயபார்ஶ்வதண்டகடிதாம் ஸ்ரீபாஷ்யஸிலஸ்திராம் - நிஶ்ரேணிம் நிகிலோஜகம்சபரவ்யோமஸ்தலீப்ராபிகாம் ஸ்வஸ்வாசார்யநிரூபிதார்

(க) [illegible] (உ) [illegible]

(ங) [illegible]

† இவ்விடந்தொடங்கி 'அனந்தரம் ஸமூஹத்திலுண்டான ஸ்ரீ வைஷ்ணவர்களைப் பார்த்துப் பின்னையும்' என்று வருகிற வரையிலுமுள்ள க்ரந்தங்கட்குப் பதிலாக 'அருளிச்செய்ய, பின்னையும் அவர்கள் போரவிஷண்ணராய் 'இனி அடியோங்களுக்குச் செய்ய அடுப்பதென்?' என்று விண்ணப்பஞ்செய்ய, உடையவரும் 'பட்டினி புகுதல், பட்டினிவிடுதல்செய்யு மத்தனையோ!' என்று சில ப்ரதிகளின் பாடம்.

த்தவசாத: ப்ராப்யதீர்ச்சஹேஹந்ஸதா", (க) "இத்யாசமாஸ்யஸாம்
மடாத்தகமுக ஸ்ரீதிவ்யஸூர்யக்ருதி ராசார்யஸ்யசதத் ப்ரபந்த
நிவஹஸ்லார்த்தம்ப்ரதிஷ்டாப்யச- ஸ்ரீரங்கராஜமதாமலை ஸைவமபூச்
சீ திவ்யஸூரிஸ்ரீவாஜைஸ் ஸாகம் தத்பராமம்பதம்ஸுமபிஷாஸ் ஸ்ரீமாந்
ஸ்ராமாநுஜ:" என்கிறபடியே இங்குச் செய்யவேண்டும் கார்யங்களெல்
லாஞ் செய்து தலைக்கட்டி க்ருதக்ருத்யராய் காலாகாள் அங்கே திருநா
டேற வெழுந்தருளத் திருவுள்ளமாயிருக்க,

அவ்வளவிலே பெரியபெருமாளைத் திருவாராதநம் பண்ணிப்
போரும் ஸ்ரீரங்கராஜபட்டர் பெரியபெருமாள் பட்டர் முதலானோர்
பெரியபெருமாள் *உடுத்துக்களைந்த பீதகவாடை *சூடிக்களைந்த திவ்
யமால்யப்படி சாத்துப்படிகள் அவர்ப்ரஸாதம் தொடக்கமான ப்ரஸாத
விசேஷங்களையும் போரத் தளிகையிலே எடுப்பித்துக்கொண்டு ஸர்வ
வாத்யகோஷத்துடன், கொண்டுவந்து ப்ரஸாதித்தவற்றை ஸிரஸாத
ரித்து லேவித்து ஸ்வீகரித்த அநந்தரம் அவர்களுக்கு உசிதமான
பாஞ்சராத்ர ஸம்ஹிதைகளில் ஜ்ஞாந காண்டங்களை அநுஸந்தித்து
ஸேவித்துக்கொண்டிருந்து ஏவம்விதமான தூர்யகோஷத்தைக்கேட்டு
ஹ்ருஷ்டராய் வைகுண்ட நிர்யாணநிரதராய். அதுக்கு ப்ரயாணபாதே
யமானத்வயத்தை ஆவ்ருத்தி பண்ணுகிறவர் நடஸ்தரைக் கடா
க்ஷித்தருளித் தாம்ஸ்தமான கூடஸ்த ஸ்ரீஸூக்தியையும் ஸ்ரீபாஷ்யத்
தையும் சேஷமமான நிக்ஷேபமாக ஸ்தாபிக்கும்படி ஆஜ்ஞாபித்து,
ஸ்ரீபாஷ்யத்தை வர்த்தித்து நடத்திக்கொண்டு போரும்படி கடாது
ராழ்வானைக் கடாக்ஷித்து, அவர்க்கு (உ) "ஸத்குர்வதாஸ்ய ஸதிஸிஷ்ய
வர்க்கா கைங்கர்யபாதிசைர்ஸதிஹமை: - ஸ்ரீபாஷ்யஸிம்ஹாஸகமாத்
மீயம் யஸ்மைசதத்தம்யதிபோகிராஜ:" என்னும்படி ஸ்ரீபாஷ்ய ஸிம்

---

(க) [illegible]

(உ) [illegible]

ஹஸ்தத்தை ப்ரஸாதித்து, அனந்தரம் முக்தப்ராப்யஸாதித்த வேதாந்தா சார்ய பதநிற்றுப்யேல் (க) "இத்துப்ரபத்திபலதாசிரவிஷ்ணுமாய மத்வப்ஸ்யராஜகுல" என்னும்படியான ராஜகுலமாஹாத்ம்யத்தையுடைய ராகையாலே ப்ரபத்யர்த்தப்ரதிபாதகமாய்ப் ப்ரமாணஸாரமான ஸ்ரீஸூக்திஸிம்ஹாஸனத்தையும் அந்தப்பெரியபரிஷத்திலே பெரியபட்டர்க்கு இட்டருளி, கந்தாடை யாண்டானைக் கடாக்ஷித்து ப்ரமாத்ருசரமமான தம்முடைய சரமவிக்ரஹ கைங்கர்யத்தைக் கல்பித்தருளி, திருக்குருகைப்பிரான் பிள்ளான் முதலான முதலிகளைப் பார்த்து பட்டர்க்கு இஷ்டமாயிருங்கோள்' என்று அருளிச்செய்து, கோயிலனைத்துக்கொத்தையும் அழைப்பித்து அபராதக்ஷாபணம் பண்ணிக்கொண்டு வேண்டிக்கொள்ள, அவர்களும் 'தேவரீருக்கு ஒரு அபராதமுண்டோ? *உலகங்கட்கெல்லாம் ஒருயிரான தேவரீரை' இழந்து எங்ஙனே தரிப்போம்?' என்று கண்பனிசோரநிற்க, உடையவரும் '*அன்போடு தென்திசைநோக்கிப் பள்ளிகொள்ளும் அணியரங்கனிருக்க, உங்களுக்கு ஒரு தாழ்வில்லை; பெரியபெருமாள் ஸ்ரீகார்யம் ஆராயுமிடத்துப் பட்டரை முன்னிட்டு ஆராய்ந்துபோருங்கோள்; நம்பெருமாள் கைங்கர்யத்தைக் குறைவற நடத்திக்கொண்டு ஸ்ரீவைஷ்ணவர்களையும் வரவனைத்துக்கொண்டு போருங்கோள்' என்று கல்பித்தருளி, அவர்களைப் பட்டர் திருக்கையிலேகாட்டிக்கொடுத்தருளி, பட்டரைப்பார்த்தருளி 'உமக்குத்* தந்தையும்தாயுமாவாராய்ப்ரமேயஸாரமான பெரியபெருமாள் திருவாராதநத்தைப் பெருக்க நடத்திக்கொண்டு, நம்முடைய தர்ஶநத்தையும் நன்றாய்ப்பராமர்ஶித்து நடத்திக்கொண்டு போரும் என்று நியமித்தருளினர்.

அனந்தரம் ஸமூஹத்திலுண்டான ஸ்ரீவைஷ்ணவர்களைப் பார்த்துப் பின்னையும் அவர்களுக்கு அருளிச்செய்தபடி:—'ஒருவன் ப்ரபந்னனால் அவனுடைய ஆத்மயாத்ரை ஈஶ்வராதீநமாகையாலே அதுக்குக் கரைய வேண்டா; கரைந்தானாகில் ஆத்மஸமர்ப்பணம் பொய்யாயித்தனை. இனி இவனுடைய தேஹயாத்ரை கர்மாதீநமாகையாலே, அதுக்குக் கரையவேண்டா; கரைந்தானாகில், நாஸ்திகனுமித்தனை. ஆகையாலே, உபயயாத்ரையிலும் இவனுக்கு அந்வயமில்லை' என்று

(க) கிஞ்சாஹுவ்ருத்திவைஶதாரீ தவிஷ்ணோரேயஸ்ஸம்ஸ்யராஜகுலம் |

அருளிச்செய்ய, முதலிகளும் 'ஆகில், எங்களுக்கு இருக்கும் நாளைக்குக் காலக்ஷேபமிருக்கும்படி எங்ஙனே?' என்ன, உடையவரும் 'உபாயாம்ஸத்தில் அந்வயியாதே ப்ராப்யமான பகவத்பாகவத கைங்கர்யத்திலே அந்வயியுங்கோள். ப்ரபந்நாதிகாரிக்கு முன்னடி பார்த்து வர்த்திக்கவேண்டுவன-மூன்று விஷயமுண்டு; அவையாவன-அநுகூலரென்றும், ப்ரதிகூலரென்றும், அநுபயரென்றும்; அநுகூலராவார்-ஸ்ரீவைஷ்ணவர்கள்; ப்ரதிகூலராவார்-பகவத்த்வேஷிகள்; அநுபயராவார்-ஸம்ஸாரிகள். இதில், அநுகூலரைக் கண்டால் சந்தந குஸும தாம்பூலாதிகளைக் கண்டாற்போலவும், நிலாத் தென்றல்களைக் கண்டாற்போலவும், அபிமதவிஷயத்தைக் கண்டாற்போலவும் உகந்துபோரக்கடவன்; ப்ரதிகூலரைக்கண்டால் ஸர்ப்பாக்நிகளைக் கண்டாற்போலே வெருவி வர்த்திக்கக் கடவன்; அநுபயரைக் கண்டால் காஷ்ட லோஷ்டாதிகளைக் கண்டாற்போலே த்ருணீகரித்து வர்த்திக்கக்கடவன். அவர்கள் அநுகூலித்தார்களாகில் ஆத்மஜ்ஞாநத்தை உபதேசிக்கவும்; அநுகூலியார்களாகில் ஐயோ! என்று க்ருபைபண்ணிப்போரவும். இப்படி செய்யவொட்டாதொழிகிறது, அர்த்தகாமப்ராவண்யம். அர்த்தகாமமடியாக ஸ்ரீவைஷ்ணவர்களை அநாதரிக்குமாகில், ஸார்வபௌமனை ராஜபுத்ரனை ராஜஸந்நிதியிலே பரிபவித்தால் ராஜா வெறுத்திருக்குமாபோலே எம்பெருமான் திருவுள்ளம் வெறுக்கும். அர்த்தகாமமடியாக ப்ரதிகூலரை ஆதரிக்குமாகில், ஸார்வபௌமனை ராஜாவின் மஹிஷீ க்ஷுத்ர ஜந்துக்கள் பக்கல் மடிப்பிச்சைபுக்கால் ராஜாவுக்கு அவத்யமாகையாலே ராஜா வெறுக்குமாபோலே எம்பெருமான் இவனை வெறுத்திருக்கும்; அர்த்தகாமமடியாக அநுபயரை ஆதரிக்குமாகில், ரத்நத்திற்கும் பலகறைக்கும் வாசியறியாதாப்போலே பிறந்தஜ்ஞாநம் கார்யகரமாய்த்தில்லையென்று எம்பெருமான் இவனை அநாதரிக்கும்' என்று அருளிச்செய்தருளினார்.

பின்பு எம்பெருமானார் நம்பெருமாள் ஸந்நிதிக்குப் பட்டரைக் கூட்டிக்கொண்டு எழுந்தருளிப் பெருமாளை ஸேவித்து, பட்டருக்கு முன்னாகத் தீர்த்த ப்ரஸாதங்களை ப்ரஸாதிப்பித்து, பின்பு தாமும் தீர்த்தப்ரஸாதம் பெற்று, முதலிகளைக் குறித்து 'முன்னுக்குத் தர்ஸந ப்ரவர்த்தகராவார் இவர்' என்று பட்டரைக் காட்டியருளி, 'வாரீர் பட்டரே! மேல்நாட்டிலே வேதாந்தி யென்று ஒரு பெரிய வித்வான்

இருக்கிறானென்று கேட்டோம். நீர் அங்கேறப் போய் அவனை நம் தர்ஸமப்ரவர்த்தகனும்படி திருத்தும்' என்று அருளிச்செய்து, பட்டரையுங் கூட்டிக்கொண்டு மடமே யெழுந்தருளி, ஸ்ரீபாதத்து முதலிகளெல்லாரையும் அழைத்து 'நம்முடைய விஸ்லேஷத்தில் அவிவேகம் பண்ணினீர்களாகில் நம்மாணை' என்று ஆஜ்ஞாபித்து, எல்லார் கையாலும் தம் திருவடிகளைத் தொடுவித்துச் சூளுறவு கொண்டு, முதலிகளைத் தீர்த்தங்கொண்டு அமுது செய்யப்பண்ணி, பிள்ளைப் பிள்ளையாழ்வான் உக்கலாழ்வான் கோமடத்தாழ்வான் செட்டலூர்ச்சிறியாழ்வான் வேதாந்தியாழ்வான் முதலானவர்களைக் கந்தாடையாண்டான் திருக்கையிலே காட்டிக்கொடுத்தருளியும், எச்சான் அனந்தாழ்வான் தொண்டனூர் நம்பி மருதூர் நம்பி முதலானவர்களை அருளாளப்பெருமாளெம்பெருமானார் திருக் கையிலே காட்டிக்கொடுத்தருளியும், பட்டர் கணியனூர்ச் சிறியாச்சான் சட்டம் பள்ளிச்சீயர் பெரியாண்டான் சிறியாண்டான் முதலானவர்களை எம்பார் திருக்கையிலே காட்டிக் கொடுத்தருளியும், கிடாம்பியாச்சான் கிடாம்பிப் பெருமாள் எங்களாழ்வான் நடாதூராழ்வான் முதலானவர்களைத் திருக்குருகைப்பிரான்பிள்ளான் திருக்கையிலே காட்டிக்கொடுத்தருளியும், மாருதிப்பெரியாண்டான் மாறொன்றில்லாமாருதிச்சிறியாண்டான் அரணபுரத்தாழ்வான் ஆசூரிப்பெருமாள் முனிப் பெருமாள் அம்மங்கிப் பெருமாள் முதலானவர்களை நடுவிலாழ்வான் திருக்கையிலே காட்டிக்கொடுத்தருளியும், இன்னும் இருந்தவர்களை இருந்தவர்கள்கையிலே காட்டிக்கொடுத்தருளியும்;

பின்பு பட்டரைப் பார்த்தருளி 'கூரத்தாழ்வானையும் கந்தாடை ஆண்டானையும்போலே, கூரகுல திலகரான நீரும் வாதூலகுல திலகரான கந்தாடையாண்டானும் நம்மடியாகவுண்டான ஸௌப்ராத்ரத்தையுடையராய், (க) "மச்சித்தாமத்கதப்ராணா: போதயந்த:பரஸ்பரம்" என்னும்படியாயிருங்கோள்' என்று அருளிச்செய்து, ஸ்ரீவைஷ்ணவர்களைப்பார்த்து '(உ) "படித்வாபாஷ்யந்தத்ப்ரவசநமஶக்தௌ ஶடரிபோர்கிரிம்ஸத்ராவாஸ:ப்ரபுரிதஸ்தாநகிவந்தோஹ-ப்ரபோ:

(க) [illegible]

(உ) [illegible]

கைங்கர்யம்ஸம்பதகமகோசர்த்தமகைப் ப்ரபன்னாம்ஸவமேபலனுபரி சர்யாபரிசய:-குரூணாம் க்ருத்வா தஸ்மிந்யதுகிரிதடே நித்யவாஸம் விஷ்டாத் தாம்ஸ்ரீமாஸ்யப்ரபந்நவிதேன்வாதகதமா:” என்று இருக்குமவர்கள் பண்ணலாங்கைங்கர்யம் ஆறுஉண்டு; அவையாவன-ஸ்ரீபாஷ்யத்தை வாசித்தும் வாசிப்பித்தும் போருகை; அதற்கு யோக்யதை யில்லாவிடில், அருளிச்செயலை ஓதியும் ஓதுவித்தும் போருகை; அதற்கும் யோக்யதை யில்லாவிடில், உகந்தருளின நிலங்களிலே அமுதுபடி சாத்துப்படி முதலானவற்றை யுண்டாக்கி நடத்திக்கொண்டுபோருகை; அதற்கும் யோக்யதையில்லையாகில், † திருநாராயணபுரத்திலே ஒருகுடில் கட்டிக்கொண்டிருக்கை; அதற்கும் யோக்யதையில்லையாகில், த்வயத்தை அர்த்தாநுஸந்தாநம் பண்ணிப் போருகை; அதற்கும் யோக்யதை யில்லையாகில், என்னுடையவனென்று அபிமாநிப்பான் ஒரு பரமபாகவதன், அவனுடைய அபிமாநத்திலே ஒதுங்கிப்போருகை' என்றும், இவற்றின் ப்ரியப்ரியதர ப்ரியதமங்கள் இன்னதென்றும், “ப்ராப்திப்ரதிபந்தகமான பகவத் பாகவத ஆசார்யவிஷயங்களில் அபசாரத்தை வருத்தியும் பரிஹரித்துப் போருங்கோள்' என்றும் இவை முதலானவைகளாயுள்ள அநேக ஹிதங்களை ப்ரஸாதித்து அவற்றை உபஸம்ஹரித்தருளினார்.

‡ “அநந்தரம் ஸகலமங்களவாத்யங்களும் ஆரவாரிக்க, அநேகதிவ்யப்ரபந்தாநுஸந்தாநத்வநி எங்கும் பூரிதமாக, அலங்காரத்திருமஞ்ஜநம்

---

வாஜ்யவடிநகெநாராய:ஸ்நேநம் ஜ்யவஸாநம் வாஜேஹவதாவரி ஊர்த்வாவரிஉய: ॥ காஷ்டீக்ஷ்யவா தஸ்ஷ்ரீத்ருதமிரிதடே நித்யவாஸ திஷ்டயதா:ஸ்ரீமாஸ்யஜ்யவடிநவியன்ஸாயக:கேரா: ॥

† 'ஸ்லோகத்தில் ஆறுவதாகச் சொல்லியிருக்கிற விஷயத்தை இங்கே நான் காவதாகச் சொல்லியிருப்பது “பாடக்ரமாதபேக்ஷயா அர்த்தக்ரமஸ்ய பலீயஸ்த்வம் [-பதங்களிருக்கின்ற முறைமையைவிட அர்த்தங்கொள்ளுமுறை சிறந்தது]” என்ற ந்யாயமபற்றி; திவ்யதேசங்களில் கைங்கர்யஞ் செய்ய வலிமையில்லாதவனுக்கு அங்கே ஓரிடத்திலே நித்யவாஸஞ்செய்கையை விதிப்பதே முறைமையாதலால்' என்று பெரியோர் கூறுவர்.

‡ இந்தப் பாராவுள்ள இடத்தில் சிலப்ரதிகளில் 'கோயிலுக்கு நேரே எம்பார் மடியிலே திருமுடியும் வடுகநம்பி திருமுடியிலே திருவடிகளுமாகக் கண் வளர்ந்தருளி, ஸ்ரீபாதத்து முதலிகள ப்ருஹ்மவல்லி ப்ருகுவல்லி சூழ்விசும்பணி முகில் முதலானவற்றை ஸேவித்தருள, ஸிம்ஹபாவம் பேதித்து ப்ருஹ்மரந்த்ரத்தாலே உடையவர் திருநாட்டுக்கு எழுந்தருள,' என்று பாடம்.

கண்டருளித் திருவொற்றாடைசாத்தித் திருப்பரியட்டஞ்சாத்தி, ஸ்நாத்
தாசமநபூர்வகமாக நித்யாநுஷ்டாநங்கள் நடத்தியருளுகையில் அஸாக்
கிபாராமல் அர்க்யத்தையும் உத்திஷ்டமாகாப்பின்றே செய்தருளித்
தச்சேஷத்தையுந் தலைக்கட்டியருளி, திருத்வாதசநாமங்களையுந் தரித்
தருளி, திருமணிவடம் திருப்பவித்ரம் திருமாலைப்ரஸாதம் பரியட்ட
ப்ரஸாதங்கள் முதலானவற்றையுஞ் சாத்தியருளி, தீர்த்தங்களையும்
ஸ்வீகரித்து, குருபரம்பராபூர்வகமாக ரஹஸ்யத்ரயத்தையும் ஸார்த்த
மாக அநுஸந்தித்து, பெரியபெருமாள் திருவடிகளை உத்தேசித்துத்
தண்டன் ஸமர்ப்பித்து, முதலிகளையும் அநுவர்த்தித்து அநுமதி
கொண்டு ஆளவந்தார் திவ்யமங்களவிக்ரஹத்தை த்யானித்துக்கொண்டு
பத்மாஸநஸ்தராய் எழுந்தருளியிருந்து பரவாஸுதேவரிடத்திலே
பரமபக்தியுடைத்து செல்ல, அநந்தரம் யோகத்தில் பரமயோகியான
தம்மைப் பரமயோகிகம்யவிஷயமான தத்விஷயத்திலே விநியோகித்து,
பின்பு (க) "பத்மபத்ரேக்ஷணம்" என்கிறபடியே திருக்கண்களைச்
செம்பிளித்தருளிப்பரவஸ்ஹூத்ராய், எம்பார் திருமடியிலே திருமுடி
யும் வடுகநம்பி திருமடியிலே திருவடிகளுமாகக் கண்வளர்ந்தருளி, (உ)
"மாகஸ்நாத்தகம்பார்க்க மத்பாஹ்நேகமத்வாஸரே - யோ ஸ்ரீராஜஸ்
ஸ்வபோகேமபாவம்ஸ்ஸேவபேஸப்பமாத்" என்னும்படியான இவனத்
திலே தம்முடைய பூர்வாவதாரமான * ஆயிரஞ்சுடர்வாய் அரவணை
யோடே நம்பிமூத்தபிரானைப்போலே எம்பெருமானாரான இவரும்
கூடியருளினர். இவ்வ்ருத்தாந்தத்தைப் பின்னும்:— "பின்பு மங்க
ருடன்களித்த சீர்பெரும்பூதூரெதிராசன், இன்ப முடனு மிசைந்
தொருநூற் றிருப தாண்டிங் கிருந்ததற்பின், அன்பாழ்வா னாண்
டானற் குமரர்க்கடியர்முடிபுனைந்து, மன்பதையை வாழ்வித்தாங் கமரு
மெனவாழ்வித்தருளா," "ஆரமஞ்சூழரங்கர்தமை யலர்மாமகளையடி
யிறைஞ்சித், தாரிச்சரணந்தனையென்னத் தந்தேயெனவும்மெதிராசன்,
பரமோர்ப்பரவும்பாகவதர் பிரிவாஸ் பரிவில்படர்கூரச், சீரார்திருநா
டடைந்திருந்த சீடனுடனே சேர்ந்தனனால்." இப்படி சொல்லப்படு

---

(க) பத்மபத்ரேக்ஷணம்। (உ) மாகஸ்நாத்தகம்பார்க்க
மத்பாஹ்நேகமத்வாஸரே । யோ ஸ்ரீராஜஸ்வபோகேமபாவம்ஸ்ஸேவ
பேஸப்பமாத் ॥

மதான வைபவத்தையுடைய இவரும் (௧) "யதாபாதேதாதால் த்வசா நிர்முக்த:" என்றும், (௨) "யாவஜ்ஜீஹாமிகாத்ராணிஜீர்ணாத் த்வசமிவோரக:" என்றும் சொல்லுகிறபடியே (௩) "ஜீர்ணமிவவஸ்த்ரம் ஸுகேநேமாம்ப்ரக்ருதிம் ஸ்தூலஸூக்ஷ்மரூபாம் விஸ்ருஜ்ய" என்று ஸுகமாகவே திருமேனியை உபேக்ஷைபோடே விட,

அனந்தரம் கந்தாடையாண்டான் அருளாளப்பெருமாளெம்பெருமானார் எம்பார் வடுகநம்பி முதலான முதலிகளெல்லாரும் கோஷித்துக் கொண்டு வேரற்றமரம்போலே விழுந்து கிடந்து துடித்து, திருமிடறு தழுதழுப்பத் திருமூக்குவெப்படிக்க அவசராய்க் கிடந்து * இட்டகால் இட்டகைகளாய்ச் * சிந்தித்துத் திகைத்து, * இணைமலர்க்கண்ணீர்ததும்பத் தாராவர்ஷமாகத் திருமுத்துதிர்த்து ப்ரலாபித்து, 'இவர் அவதாரத்தில் "நிர் லப்தா" என்றும், இவர் அந்திமதசையில் 'நர்மே கஷ்ட:' என்றும் இப்படி வருவதே!' என்று ஆர்த்தர்ப்பட்டு விஷண்ணராயிருக்க, அவ்வளவிலே பெருமாளும் 'நம்முடையவரை யிழந்தோமே!' என்று திருவுள்ளம்நொந்து 'நமக்குச் செல்வாய்வக்ரமாய்த்து' என்று கருணமுதும் அமுதுசெய்யாமல் நாச்சிமாருடனே புறப்பட்டருள, அவ்வளவில் பராங்குசன் பரகாலன் முதலான ஆழ்வார்கள் பதின்மர்களும் சேவித்துச்செல்ல, ஆயிரக்கால் திருமண்டபத்திலே எழுந்தருளியிருந்து, திருமுத்தின்பணி காளாஞ்சி திருவெண்சாமரம் திருவாலவட்டம் திருவெண்கொற்றக்குடை வெண்முத்தின்கலசம் திருமேற்கட்டு முத்துத்தாமம் தொடக்கமானவையும், * உடுத்துக்களைந்த பீதகவாடை, * சூடிக்களைந்த தொடுத்த துழாய் மலர், * எண்ணெய் சுண்ணம் எல்லாம் பொற்றளிகையிலே கொண்டு போம்படி உத்தமநம்பிக்கு விடைகொடுத்தருள, நம்பியும் அப்படியே தரித்துக்கொண்டு பெருமாள்பரிகரம் அனைத்துக்கொத்தோடும் ஸகலவாத்யத்துடனே மடத்துவாசலிலே செல்ல, அதுகண்டு முதலிகளெல்லாரும் தேறிநின்று 'இனிச்செய்யவேண்டும் க்ருத்யத்தைச் செய்யவேணும்' என்று எம்பெருமானாருடைய விமலசரமவிக்ரஹத்தைத்

---

(௧) யதாவாதோதாரஸ்வா நிர்முக்த:। (௨) யாவஜ்ஜீர்ணானி ஜீர்ணாத்வசமிவோரக:। (௩) ஜீர்ணமிவவஸ்த்ரம் ஸுகேநேமாம் ப்ரக்ருதிம் ஸ்தூலஸூக்ஷ்மரூபாம் விஸ்ருஜ்ய।

னய்தாக நீராடப் பண்ணிவைத்து அலங்கரித்துக் கேஸவாதித்வாத
ஸோர்த்வபுண்ட்ரங்களையுஞ்சாத்தி, பெருமாள் சாத்திக்களைந்து வா
விட்டருளின * பெருமானரையிற் பீதகவண்ணவாடைகொண்டு திரு
முடியிலே சாத்தி, அவன்மார்வணிந்த வநமாலையும் சாத்தி அலங்
கரித்து, உடையவர் திருவடிகளைத் தங்கள் கண்ணிலும் மார்பிலும்
சென்னியிலும் ஒற்றிக்கொண்டு, ஆசார்யவிஸ்லேஷாஸஹிஷ்ணுக்களாய்,
'*ஐயோ! கண்ணபிரான்! அறையோ! * முறையோ! அரவணைமேற்
பள்ளிகொண்ட முகில்வண்ணனே!' என்று கையெடுத்துப் போரப்
பெரும்பிடறுசெய்து கூப்பிட்டு மூர்ச்சித்துக்கிடக்க, அருகிருந்த முதலி
கள் வந்து எடுத்துத் தேற்ற, தேறிநின்று உடையவர்க்குச்சாத்திக்
களைந்த தச்சேஷமாயிருந்துள்ள * எண்ணெய்ச் சுண்ணம் திருமண்
ஸ்ரீசூர்ணங்களை எல்லாரும் ப்ரஸாதப்பட்டுத் தீர்த்தங்கொண்டு, திருக்
குருகைப்பிரான் பிள்ளான் திருக்கையாலே ஆளவந்தார்க்குப்போலே
உடையவர்க்கு ப்ரஹ்மமேதத்தாலே ஸம்ஸ்கரித்து, பீடகமான திவ்
யவிமாநத்திலே எழுந்தருளப்பண்ணி, ஸகல வாத்யங்களும் முழங்க,
பெருமாள் பரிகரமுடைய சத்ர சாமர தாலவ்ருந்தாதிகளைத் தரித்து
ஸேவிக்க, அவ்வளவிலே ஆட்கொண்ட வில்லிசீயர் யதிவாசீயர் உள்
ளிட்ட எழுநூறு சீயர்களும் ப்ரஹ்மவல்லீ ப்ருகுவல்லீ நாராயணநுவா
கம் முதலான உபநிஷத்துக்களை ஓத, பட்டர் கந்தாடையாண்டான்
நடாதூராழ்வானுள்ளிட்ட முதலிகளும் தத்தத்பரிசர்யாஸாதநங்களை
தரித்துக்கொண்டு பரிவுடன் பரிவ்ருதராய்ச் ஸேவித்துக்கொண்டுவர,
மற்றுமுண்டான உபவீததாரிகளான ஸ்ரீவைஷ்ணவர்கள் ஒன்பதினாயி
ரம்பேரும் ததபாவரான ஸ்ரீவைஷ்ணவர்கள் பன்னீராயிரம்பேரும்
அருளிச்செயல் மூவாயிரமும் முன்னடி பின்னடியாக ஸேவிக்க,
திருவரங்கப்பெருமாளரையர் பரிகரமான திருவாய்மொழியரையர்
ஆட்பான் திருவழுந்தூரரையர் திருநறையூரரையர் அழகிய மணவாளா
ரையர்முதலான எழுநூறு திருவாய்மொழி விண்ணப்பஞ்செய்யுந்தம்பி
ரான்மார் பண்ணிசைதானத்துடன் திருவாய்மொழிபாட, திருவரங்
கத்தமுதனார் †பொய்யில் வல்லவர் தொடக்கமானவர்கள் உடையவர்
நூற்றந்தாதி ஸேவிக்க, எம்பார் பிள்ளான் உள்ளிட்டவர்கள் ததி
கப்ரீதிஹேதுவான ஸ்தோத்ரகத்யங்களை ஸேவிக்க, வடுகநம்பியும்

† 'பெரியகோயில்வள்ளலார்' என்று அநேகப்ரதிகளிற் பாடம்.

ராமாநுஜதாஸரான கோமடத்துச்சிறியாழ்வானும் உடையவர் ப்ரபத்தியை அநுஸந்தித்துக்கொண்டு வர, திருவீதியெங்கும் கோடித்துப் பொரியும் புஷ்பமும் சிதற, நடைபாவாடையிட்டு, கரும்பும் குடமும் எந்த, திருப்பதியில் ஸுமங்கலிகள் மங்கள தீபமேந்தி முன்னே செல்ல இருபக்கமும் சாமரமிரட்டிக்க, வெள்ளைவட்டமிட, 'தர்சநத்தில் எம்பெருமானார் திருநாட்டுக்கு எழுந்தருளினார்' என்று ஒற்றைத்திருச்சின்னம் பணிமாற' திருவீதிகள்தோறும் எழுந்தருளுவித்துக்கொண்டு போய், ‡ (பெரியபெருமாளும் அந்தத் திருமேனியில் அபிமத விஷயத்தில் அழுக்கு உகக்குமாபோலே அதிசபலராய் "மங்கவொட்டு" என்னும்படி இவர் விக்ரஹத்தை ஆகரித்துப் புறம்பே கொண்டுபோகவொட்டாமல், அந்தஃபுர மஹிஷிகளைத் தத்பரிஸரத்திலே ஆராமத்திலே அடக்கி வைக்குமாபோலேயும், நிதியை உள்ளே இட்டு வைக்குமாபோலேயும், லக்ஷ்மீ துல்யராம்படியான லக்ஷணங்களையுடையராய் விலக்ஷணமான நிதிபோலே "இராமாநுசன் என்தன்மாநிதி," "இராமாநுசன் என்தன்சேமவைப்பு" என்னும்படியான இவர் திருமேனியையும் ஆழ்வார்திருமேனியை ஆவரணத்துக்குள்ளே பள்ளிபடுத்தாற்போலே ஆவரணத்துள்ளில் உட்கோப்பிலே அந்தரங்கமாக, கௌந்தேயனை அர்ஜுநனைப்போலே அந்தரங்கரான கந்தாடையாண்டான் திருமுடி காத்துநோக்க,) ததநுகுணமாக யதிஸம்ஸ்காரவிதியடங்கச்செய்து கீத்துப்பள்ளி படுத்தருளினார்கள்.

‡ (இப்படி நிதியை நிக்ஷேபித்தவநந்தரம் பெருமாளும் நாச்சிமாருடனேகூடத் திருமஞ்சனங்கண்டருளித் திருமுத்துதிர்த்துத் திருமுகங்கன்றிச் சுருளமுதும் அமுது செய்யாமல் அலப்புப்படவிடத் திருவுள்ளமாய், கந்தாடையாண்டான் பட்டர் முதலானாரைப் பார்த்து 'நம்முடைய அவப்ருதோத்ஸவங் கொண்டாடுமாபோலே நம் உடையவர்க்கும் அவப்ருதோத்ஸவங் கொண்டாடுங்கோள்' என்று திருவுள்ளம்பற்றிச் சேர்த்தியிலே எறியருளி உடையவர்க்கு அக்காரவடிசில் தளிகை அனுப்பியருளினார் )

§ அநந்தரம் கந்தாடையாண்டான் தொடக்கமான அனைவரும் புத்ரஶிஷ்யர் செய்யுங் காரியங்களையெல்லாஞ் செய்துகொண்டு அவப்

---

‡ குண்டலித க்ரந்தங்கள் சிலப் பிரதிகளில் இல்லை.

§ இத்தப்பாரா உள்ளவிடத்தில் 'அநந்தரம் பெருமாள் அவப்ருதங் கொண்டாடுமாபோலே தீர்த்தங்கொண்டாடிப் பத்துப் பன்னிரண்டுநாளும் செய்ய வேண்டுங் க்ருத்யங்களெல்லாஞ்செய்து பெருக்கத்திருவத்யயநமும் நடத்தியருளினார்கள்,' என்று காண்கிறது.

ருதஸ்காரமாக எல்லாரும் சேவையருளித் தத்விப்ரலேஷாஸஹராய்ப் பரிதபித்துக்கொண்டிருக்க, பின்பு ஆண்டான் எம்பெருமானாருமதியுடனே எம்பெருமானாரை எல்லாரும் ஸேவித்து உஜ்ஜீவிக்கும்படி மீளவும் அவ்விடத்திலே ஆவிர்ப்பவித்தாற்போலேயிருக்க அர்ச்சாவதாரமாக எழுந்தருளப்பண்ணி ப்ரதிஷ்டிப்பித்தருளினார். (க) "ஸ்வாவதாரஸ்தலேऽர்ச்சாऽபூத் ஸ்ரீரங்கேசபதீஸ்வர: - யஸ்மூர்த்தேதத்குணாவாஸம் ராமாநுஜகுருப்ரஜே" என்றார்கள்.

† அநந்தரம் மாஸஸ்திரைத்தமான கைங்கர்யங்களையும் ஆப்தரான தாங்கள் ஸமாப்தமாக நடத்தி, பட்டரும் கந்தாடையாண்டானும் மிகவும் ஸௌப்ராத்ரத்தையுடையராய், உடையவர்காலத்தில் அர்த்தவிசேஷங்களையும் ஒருவர்க்கொருவர் உசாவிக்கொண்டு, ராமக்ருஷ்ணாதிகளுடையபுநர் வஸ்வாதி திருநக்ஷத்ரங்களோபாதியும் ஆழ்வார்களுடைய ச்ரவணாதி திருநக்ஷத்ரங்களோபாதியும் இவருடைய சித்திரையில் திருவாதிரையையும் மற்றும் மாஸந்தோறும் வருவதான அத்திருநக்ஷத்ரத்தையும் மஹோத்ஸவமாக நடத்திக்கொண்டு, வாசாமகோசரமான தத்வைபவங்களையும் ப்ரகாசிப்பித்துக்கொண்டு, கிடாம்பியாச்சான் தொடக்கமானவரோடே பாடாற்றிக்கொண்டிருந்தார்கள்.

அநந்தரம் திருவேங்கடநாட்டினின்றும் அநந்தாழ்வான், ஸ்ரீகுஹதாஸர்முதலான முதலிகளையுங் கூட்டிக்கொண்டு அநந்தரம்பமான இவர் அவதாரஸமாதியை ஆராய்ந்தறியும்படி எழுந்தருளி, திருக்காவேரியருகே பரந்திருக்கிற தத்ஸங்கேதங்களைக் கண்டு எழுந்தருளினபடியறிந்து சோகாவிஷ்டராய், அநந்தரம் பட்டரையும் ஆண்டானையும் கண்டு ஆச்வஸித்து உடனே நேரமீண்டு எழுந்தருளினார்.

அநந்தரம் அப்படியே கீழைத்திக்கில் சோழவளநாட்டுத் திருக்கண்ணபுரம் முதலான திருப்பதிகளில் எச்சான் முதலானவர்களும், தெற்குத்திக்கானபாண்டிநாட்டுத் திருக்கோட்டியூர்நம்பிகுமாரரான யாமுநாசார்யர் சொக்கத்தேவர் திருமாலையாண்டான்குமாரரான சுந்த

---

(க) [illegible]

† இதுமுதல் மூன்று பாராக்கள் சிலப்ரதிகளில் இல்லை.

ரதனேதாருடையார்முதலானவர்களும், மேல்நாட்டிலும் சோமாசியாண்டான் மருதூர்நம்பி தொண்டனூர்நம்பிமுதலானாரும், மற்றும் அங்கே எம்பெருமானாராலே திருத்தப்பட்ட திருநாராயணபுரம் முதலான ஸ்தலங்களில் ஸ்ரீவைஷ்ணவர்களும் மற்றுமுண்டான தேசாந்தரஸ்தரெல்லாரும் திரண்டு பெருங்கூட்டமாகக் கோயிலிலே வந்து எம்பெருமானாருடைய விஶ்லேஷத்தாலே மிகவும் க்லேசித்து, அநந்தரம் பட்டரை ஸேவித்துத் தங்கள் வ்யஸநமெல்லாம் தீர்ந்து பட்டரை இஷ்டதேவதையான எம்பெருமானாரைப்போலே கண்டு, தந்தாமுக்கு வேண்டும் இஷ்டார்த்தங்களையுங் கேட்டுக்கொண்டு, நல்லபத்தாலே(௨) "ஸ்ரீபராசரபட்டார்ய சரணௌ ஸம்ச்ரயேமஹி-யத்வக்த்ராம்போஜகோசே ஸௌகோஷ்ட்யாம் ப்ராஹ்மீப்ரக்ருத்யபி,"(௩)"ப்ரமாணநகுநிர்ப்பிண்ணவாதிமத்தேபமஸ்தக:-ராஜதே நிகமார்க்கர்ஜந் ஸ்ரீபராசரகேஸரீ", (௪)'ஸ்ரீபராசரபட்டார்யம்பூயோபூயோநமாம்யஹம் - யதாத்மநாஸ்வயம்ரங்கீ பேஜேகூரேசபுத்ரதாம்" இத்யேவமாதிஸூக்திகளையும் தத்விஷயத்திலே அநுஸந்தித்துக்கொண்டு தததநுஜ்ஞையோடே தந்தாமூர்களிலே சேர்ந்தார்கள்.

ஸம்ஸாரஸ்திதிப்ரவ்ருத்திவேதநமும், தததநுகுணமான பகவதுக்தார்க்ஷிமதிக விஸ்ரம்பமும், சரமகாலதநளவும் ஸ்வாபிமாநாந்தர்ப்பூதரானவர்களுக்கு உபகாராநுகுணமாக வ்ருத்திவிசேஷோபதேசமும், பரிஹரணீயவ்ருத்தி விசேஷோபதேசமும், சரமகாலத்தில் ஸ்வாபிமத சரமாதிகாரிஸ்பர்ச விசேஷமும், திருமுடியைப்பற்றிப் பூர்வாசார்யர்கள்விளங்கத் திருவடிகளைபபற்றி அபராசார்யர்கள் விளங்கப் பூர்வாபராசார்யரூப ஹாரநாயகரத்நமான உடையவர்க்கேயுள்ள தொன்றிறே.

இத்தால் ஸ்ரீராமக்ருஷ்ணசரிதங்கள்போலே ஸ்ரீராமாநுஜார்ய சரிதமும ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸதாநுஸந்தேயமென்றதாய்த்து.

---

(௨) ஶ்ரீபராஶரபட்டார்யசரணௌ ஸம்ஶ்ரயேமஹி । யத்வக்த்ராம்போஜகோஶே ஸௌஷ்ட்யம் ப்ராஹ்மீ ப்ரக்ருத்யபி ॥

(௩) ப்ரமாணநவநிர்பிண்ணவாதிமத்தேபமஸ்தக: । ராஜதே நிகமாரண்யே ஶ்ரீபராஶரகேஸரீ ॥

(௪) ஶ்ரீபராஶரபட்டார்யம் பூயோ பூயோ நமாம்யஹம் । யதாத்மநா ஸ்வயம் ரங்கீ பேஜே கூரேஶபுத்ரதாம் ॥

எம்பெருமானார் திருநக்ஷத்ரம், சித்திரையில் திருவாதிரை.

இவர் தனியன் - ப்ரஸித்தமிறே, (௧) "யோநித்யமச்யுத" இத்யாதி.

---

உடையவர் ஸ்ரீபாதத்து முதலிகளின் தனியன் முதலியன.

ப்ராப்யதேசத்திலும் ஆசார்யசேஷத்வம் முறைதவறவொண்ணாதென்னுந் த்வரையும், சரமதசையிலும் ப்ராணப்ரயாண பாதேயமாக ஸ்வாசார்யன் தானே த்வயத்தை விடாய்கெட உபதேசிக்கப் பெற்ற தன்னேற்றமும், பாகவதாபிமானஸ்தலத்திலும் ததீயாபிமானஸ்தலமே சரமதேசமாகப்பெற்ற தன்னேற்றமும், சரமாதிகாரபாக விசேஷமும், ஆழ்வான்பக்கலிலே அநுஷ்டாந சேஷமாகக் கண்டதிறே.

முதலியாண்டான் திருநக்ஷத்ரம், சித்திரையில் புனர்வஸு,

அவர் தனியன் - (௨) "பாதுகே யதிராஜஸ்ய கதயந்தி யதாக்யயா - தஸ்ய தாசரதேஃ பாதௌ சிரஸா தாரயாம்யஹம்", (௩) "அஜஹத் பாகிநேயத்வம் பாதுகாத்வந் த்ரிதண்டதாம் - ஸம்ப்ராப்தோ யதிராஜஸ்ய குணைஸ்தத்ப்ரீதிஹேதுபிஃ - ஸ்ரீவைஷ்ணவாக்ரகண்யத்வம் ஸ்வாமித்வம்ப்ரபுதாம் ஸ்வயம் - வாதூல குலதௌஹேயம் - வந்தே தாசரதிம் குரும்."

திருக்குருகைப்பிரான்பிள்ளான் தனியன் - (௪) "யஃபர்யாப்தகலஃ க்யாதோ யதிராஜாப்திசந்த்ரமாஃ - குமுதந்திசதாம் மேऽஸௌ குரு

---

(௧) 𑌯𑍋𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌚𑍍𑌯𑍁𑌤

(௨) 𑌪𑌾𑌦𑍁𑌕𑍇 𑌯𑌤𑌿𑌰𑌾𑌜𑌸𑍍𑌯 𑌕𑌥𑌯𑌨𑍍𑌤𑌿 𑌯𑌦𑌾𑌖𑍍𑌯𑌯𑌾 । 𑌤𑌸𑍍𑌯 𑌦𑌾𑌶𑌰𑌥𑍇𑌃 𑌪𑌾𑌦𑍌 𑌶𑌿𑌰𑌸𑌾 𑌧𑌾𑌰𑌯𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ॥

(௩) 𑌅𑌜𑌹𑌦𑍍𑌭𑌾𑌗𑌿𑌨𑍇𑌯𑌤𑍍𑌵𑌂 𑌪𑌾𑌦𑍁𑌕𑌾𑌤𑍍𑌵𑌂 𑌤𑍍𑌰𑌿𑌦𑌣𑍍𑌡𑌤𑌾𑌮𑍍 । 𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍋 𑌯𑌤𑌿𑌰𑌾𑌜𑌸𑍍𑌯 𑌗𑍁𑌣𑍈𑌸𑍍𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌹𑍇𑌤𑍁𑌭𑌿𑌃 ॥ 𑌶𑍍𑌰𑍀𑌵𑍈𑌷𑍍𑌣𑌵𑌾𑌗𑍍𑌰𑌗𑌣𑍍𑌯𑌤𑍍𑌵𑌂 𑌸𑍍𑌵𑌾𑌮𑌿𑌤𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌭𑍁𑌤𑌾𑌂 𑌸𑍍𑌵𑌯𑌮𑍍 । 𑌵𑌾𑌧𑍂𑌲𑌕𑍁𑌲𑌦𑍌𑌹𑍇𑌯𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌦𑌾𑌶𑌰𑌥𑌿𑌂 𑌗𑍁𑌰𑍁𑌮𑍍 ॥

(௪) 𑌯𑌃 𑌪𑌰𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌕𑌲𑌃 𑌖𑍍𑌯𑌾𑌤𑍋 𑌯𑌤𑌿𑌰𑌾𑌜𑌾𑌬𑍍𑌧𑌿𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌾𑌃 । 𑌕𑍁𑌮𑍁𑌦𑌂 𑌦𑌿𑌶𑌤𑌾𑌂 𑌮𑍇𑌽𑌸𑍌 𑌕𑍁𑌰𑍁𑌕𑍇𑌶𑌦𑍇𑌶𑌿𑌕𑌃 ॥

கேஶவாதேஶிக:," (க) "விச்வநாயதிஸார்வபௌமஜலதேஶ்சந்த்ரோபமத்வம்கத: ஸ்ரீபாஷ்யசயதத்வயாஸ்லாகிதாய ஸ்ரீவிஷ்ணுசித்தார்ய: - வ்யாக்யாபாஷ்யக்ருதாஜ்ஞயோபதிஷ்டயோஸ்தாரமிட காடவ்யதாத பூர்வத்தன் குருகேஶ்வரக குருவரக் காருண்யபூர்ணம் பஜே."

இடாப்பியாச்சான் தனியன் - (உ) "ராமாநுஜபதாம்போஜ யுகளீ யஸ்யதீமத: - ப்ராப்யஞ்சப்ராபகம்வந்தே ப்ரணதார்த்திஹரங்குரும்", (ங) "ஆஸ்திகாக்ரேஸரம்வந்தே பவிஸாட்குருபாசகம் - யாசிதந் குருகேஶக ப்ரணதார்த்திஹரங்குரும்", (ச) "ஸ்ரீபாஷ்யத்தர்மஸ்ரீத் வாயதிபதிராஸிதம்ஸாஸதாயைர்வ்ருதோ தத்வா ஸ்ரீவெங்கடேஶம்பதி பரமபதந்தத்தவாக்ரோபிகாயை - ஆக்யாய்வேதாந்தமார்கோதயந இதிதத்பாஷ்யகாரேணதத்தா மாத்ரேயா சார்யவிஷ்ணோராநுஜமநு திவஸ்ஸாதாத்தக்ஸமாமி."

எங்களாழ்வான் தனியன் - (ரு) "ஸ்ரீவிஷ்ணுசித்தபதபங்கஜஸம் ஸ்ரயாய சேதோமமஸ்ப்ருஹயதேகிமத: பரேண - நோசேந்மமாபிபதி ஶேகரபாரதீநாம் பாவ: கதம்பவிதுமர்ஹதி வாக்விதேய:."

---

(க) [illegible]

(உ) [illegible]

(ங) [illegible]

(ச) [illegible]

(ரு) [illegible]

நடாதூராழ்வான் தனியன் - (௧) "யஸ்மிந்பதம் யதிவரஸ்யமுகாத்ப்ரணேதுர் நிஷ்க்ராமதேவநிதவேதசிரந்தபாஷ்யம் - தஸ்யை வதம்பகவதப்ரியபாகிநேயம் வந்தே குரும்வரதவிஷ்ணுபதாபிதாநம்',
(௨) "ஜ்ஞாநோத்தமோத்தநிபந்த காரணப்ரதுஷ்யத் ராமாநுஜார்ய கருணாபரிணாஹபாத்ரம் - வத்ஸாந்வவாயதிலகம்வஸதிங்குணாநாம் வந்தாமஹே வரதவிஷ்ணு குரும்வரேண்யம்."

சோமாசியாண்டான் தனியன் - (௩) "கௌஸிகாந்வயமணேர்யோகீந்த்ர பாதஸேவைகதாரகம் - ஸ்ரீராமக்ரதுநாதார்யம் ஸ்ரீபாஷ்யாம்ருத ஸாகரம்."

கடுவிலாழ்வான் தனியன் - (௪) "யேந † ப்ரோக்தஸகலவேதார்த்யஸ் கார்த்ஸ்ந்யவம்பாமஹாம்புதிஃ - மக்மஹே ஹதம்ஸதாமிந்தே மத்யமார்யகலாநிதிம்."

அருளாளப்பெருமாளெம்பெருமானார் தனியன் - (௫) "தயாபால ஸேவாய ஜ்ஞாநஸாரப்ரதாயிநே - ப்ரமேயஸாரகர்த்ரே நமோஸ்து ப்ரேமஸாலிநே", (௬) "யதிராஜதயா பாத்ரம் யதிபக்திவிபூஷணம் - தயாபாலமுநிம்வந்தே தேவராஜக்ரேஸரம்ஸதா"

(௧) 𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌪𑌦𑌂 𑌯𑌤𑌿𑌵𑌰𑌸𑍍𑌯 𑌮𑌖𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌣𑍇𑌤𑍁𑌰𑍍𑌨𑌿𑌷𑍍𑌕𑍍𑌰𑌾𑌮𑌤𑍇 𑌵𑌨𑌿𑌤𑌵𑍇𑌦𑌶𑌿𑌰𑌨𑍍𑌤𑌭𑌾𑌷𑍍𑌯𑌮𑍍 । 𑌤𑌸𑍍𑌯𑍈𑌵 𑌤𑌂 𑌭𑌗𑌵𑌤𑌃 𑌪𑍍𑌰𑌿𑌯𑌭𑌾𑌗𑌿𑌨𑍇𑌯𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌗𑍁𑌰𑍁𑌂 𑌵𑌰𑌦𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌪𑌦𑌾𑌭𑌿𑌧𑌾𑌨𑌮𑍍 ॥

(௨) 𑌜𑍍𑌞𑌾𑌨𑍋𑌤𑍍𑌤𑌮𑍋𑌤𑍍𑌤𑌨𑌿𑌬𑌨𑍍𑌧𑌕𑌰𑌣𑌪𑍍𑌰𑌤𑍁𑌷𑍍𑌯𑌤𑍍 𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌾𑌰𑍍𑌯𑌕𑌰𑍁𑌣𑌾𑌪𑌰𑌿𑌣𑌾𑌹𑌪𑌾𑌤𑍍𑌰𑌮𑍍 । 𑌵𑌤𑍍𑌸𑌾𑌨𑍍𑌵𑌵𑌾𑌯𑌤𑌿𑌲𑌕𑌂 𑌵𑌸𑌤𑌿𑌂 𑌗𑍁𑌣𑌾𑌨𑌾𑌂 𑌵𑌨𑍍𑌦𑌾𑌮𑌹𑍇 𑌵𑌰𑌦𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌗𑍁𑌰𑍁𑌂 𑌵𑌰𑍇𑌣𑍍𑌯𑌮𑍍 ॥

(௩) 𑌕𑍌𑌶𑌿𑌕𑌾𑌨𑍍𑌵𑌯𑌮𑌣𑍇𑌰𑍍𑌯𑍋𑌗𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌪𑌾𑌦𑌸𑍇𑌵𑍈𑌕𑌧𑌾𑌰𑌕𑌮𑍍 । 𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮𑌕𑍍𑌰𑌤𑍁𑌨𑌾𑌥𑌾𑌰𑍍𑌯𑌂 𑌶𑍍𑌰𑍀𑌭𑌾𑌷𑍍𑌯𑌾𑌮𑍃𑌤𑌸𑌾𑌗𑌰𑌮𑍍 ॥

(௪) 𑌯𑍇𑌨 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌸𑌕𑌲𑌵𑍇𑌦𑌾𑌰𑍍𑌥𑍍𑌯𑌕𑌾𑌰𑍍𑌤𑍍𑌸𑍍𑌨𑍍𑌯𑌸𑌮𑍍𑌪𑌾𑌮𑌹𑌾𑌮𑍍𑌬𑍁𑌧𑌿𑌃 । 𑌤𑌮𑌹𑌂 𑌹𑌤𑌮𑌤𑌾𑌮𑌿𑌨𑍍𑌦𑍇 𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌰𑍍𑌯𑌕𑌲𑌾𑌨𑌿𑌧𑌿𑌮𑍍॥ (௫) 𑌦𑌯𑌾𑌪𑌾𑌲𑌸𑍇𑌵𑌾𑌯 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌾𑌰𑌪𑍍𑌰𑌦𑌾𑌯𑌿𑌨𑍇 । 𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌸𑌾𑌰𑌂 𑌦𑌦𑌤𑍇 𑌨𑌮𑍋𑌽𑌸𑍍𑌤𑍁 𑌪𑍍𑌰𑍇𑌮𑌶𑌾𑌲𑌿𑌨𑍇 ॥

(௬) 𑌯𑌤𑌿𑌰𑌾𑌜𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌯𑌤𑌿𑌭𑌕𑍍𑌤𑌿𑌵𑌿𑌭𑍂𑌷𑌣𑌮𑍍 । 𑌦𑌯𑌾𑌪𑌾𑌲𑌮𑍁𑌨𑌿𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌦𑍇𑌵𑌰𑌾𑌜𑌾𑌗𑍍𑌰𑌸𑌂𑌸𑌦𑌮𑍍 ॥

† 'அகத்தாக்யமஹாம்புதே' என்றும் பாடம்.

*அநந்தாழ்வான் திருநக்ஷத்ரம் - சித்திரையில் சித்திரை.*

*அவர் தனியன் - (௧) “அகிலாத்மகுணாவாஸம அஜ்ஞாநதிமிராபஹம் - ஆஶ்ரிதாநாம்ஸுஶரணம் வந்தேऽநந்தார்ய தேசிகம்” (௨) “ஸ்ரீமத்ராமாநுஜாசார்ய ஸ்ரீபாதாம்போருஹத்வயம் - ஸதுத்தமாங்கஸந்தார்யம்† அநந்தார்யகுரும்பஜே,” (௩) “யதீந்த்ரபாதாம்புஜ சஞ்சரீகம் ஸ்ரீமத்தயாபாலதயைகபாத்ரம்- ஸ்ரீவேங்கடேசாங்க்ரியுகாந்தரங்கம் நமாம்யநந்தார்யமநந்தக்ருத்வ:”*

*எச்சான் தனியன்- (௪) “யேநைவைஷ்ணவஶேஷத்வ பர்யந்தம்பரமாத்மந:-ஶேஷத்வமாத்மநோஜ்ஞேயம் யஜ்ஞேஶந்தமுபாஸ்மஹே”*

*வடுகநம்பிதனியன்-(௫) “ராமாநுஜார்யசரண ப்ரவணம்பரதேவதம் - வடபூர்ணமஹம்வந்தே ப்ரஜ்ஞாபயோநிதிம்.”*

*எழுபத்துநான்கு ஆசார்யர்களுக்கும் ஸமுதாயத்தனியன் - (௬) “ராமாநுஜார்யாச்ச்ருதிமௌளிபாஷ்யம் அர்த்தம்ரஹஸ்யத்ர யீடம்ப்ருதீசாம் - ஸம்ப்ராப்யதேகைவகுருக்ருதாம்ஸ்தாந் பஜேசதுஸ்ஸப்ததிபீடஸம்ஸ்தாந்.”*

---

(௧) 𑌅𑌖𑌿𑌲𑌾𑌤𑍍𑌮𑌗𑍁𑌣𑌾𑌵𑌾𑌸 𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌤𑌿𑌮𑌿𑌰𑌾𑌪𑌹𑌮𑍍 । 𑌆𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌨𑌾𑌂 𑌸𑍁𑌶𑌰𑌣𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇𑌽𑌨𑌨𑍍𑌤𑌾𑌰𑍍𑌯𑌦𑍇𑌶𑌿𑌕𑌮𑍍 ॥

(௨) 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌾𑌚𑌾𑌰𑍍𑌯 𑌶𑍍𑌰𑍀𑌪𑌾𑌦𑌾𑌮𑍍𑌭𑍋𑌰𑍁𑌹𑌦𑍍𑌵𑌯𑌮𑍍 । 𑌸𑌦𑍁𑌤𑍍𑌤𑌮𑌾𑌙𑍍𑌗𑌸𑌂𑌧𑌾𑌰𑍍𑌯𑌮𑌨𑌨𑍍𑌤𑌾𑌰𑍍𑌯𑌮𑌹𑌂 𑌭𑌜𑍇 ॥

(௩) 𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌪𑌾𑌦𑌾𑌮𑍍𑌭𑍋𑌜𑌚𑌞𑍍𑌚𑌰𑍀𑌕𑌂 𑌶𑍍𑌰𑍀𑌦𑌯𑌾𑌪𑌾𑌲𑌦𑌯𑍈𑌕𑌪𑌾𑌤𑍍𑌰𑌮𑍍 । 𑌶𑍍𑌰𑍀𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑍇𑌶𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌯𑍁𑌗𑌾𑌨𑍍𑌤𑌰𑌙𑍍𑌗𑌂 𑌨𑌮𑌾𑌮𑍍𑌯𑌨𑌨𑍍𑌤𑌾𑌰𑍍𑌯𑌮𑌨𑌨𑍍𑌤𑌕𑍃𑌤𑍍𑌵𑌃 ॥

(௪) 𑌯𑍇𑌨𑍈𑌵 𑌵𑍈𑌷𑍍𑌣𑌵𑌶𑍇𑌷𑌤𑍍𑌵𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌂 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 । 𑌶𑍇𑌷𑌤𑍍𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑍋 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌯𑌜𑍍𑌞𑍇𑌶𑌂 𑌤𑌮𑍁𑌪𑌾𑌸𑍍𑌮𑌹𑍇 ॥

(௫) 𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌾𑌰𑍍𑌯𑌚𑌰𑌣𑌪𑍍𑌰𑌵𑌣𑌂 𑌪𑌰𑌦𑍇𑌵𑌤𑌮𑍍 । 𑌵𑌟𑌪𑍂𑌰𑍍𑌣𑌮𑌹𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑌯𑍋𑌨𑌿𑌧𑌿𑌮𑍍 ॥

(௬) 𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌾𑌰𑍍𑌯𑌾𑌚𑍍𑌛𑍍𑌰𑍁𑌤𑌿𑌮𑍌𑌳𑌿𑌭𑌾𑌷𑍍𑌯𑌂 𑌰𑌹𑌸𑍍𑌯𑌤𑍍𑌰𑌯𑍀𑌮𑌪𑍍𑌯𑌤𑍀𑌶𑌾𑌂 । 𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌦𑍇𑌵𑍈𑌕𑌗𑍁𑌰𑍂𑌨𑍍𑌕𑍃𑌤𑌾𑌂𑌸𑍍𑌤𑌾𑌨𑍍 𑌭𑌜𑍇 𑌚𑌤𑍁𑌸𑍍𑌸𑌪𑍍𑌤𑌤𑌿𑌪𑍀𑌠𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌨𑍍 ॥

மாருதிச் சிறியாண்டான், தம்முடைய அந்திமதசையிலே பணித்த வார்த்தை:— 'திருவேங்கடமுடையான் தன் ஸ்வரூபத்தை மறந்து என் ஸ்வரூபத்தை நினைத்தானாகில், பழைய நரகங்களொழிய வேறே எனக்கென்று சில நரகங்களை ஸ்ருஷ்டிக்கவேணுமிறே; அன்றிக்கே, என் ஸ்வரூபத்தை மறந்து தன் ஸ்வரூபத்தை உணர்த்தானாகில், பழைய திருநாடு போராது; எனக்கென்று வேறே ஒரு திருநாடு ஸ்ருஷ்டிக்க வேணுமிறே': அதாவது ஸ்வக்ருததோஷஸ்மரணம் அநந்தது:கப்ரதமாகிறது; ஈச்வரவாத்ஸல்யஸ்மரணம் அநந்தாப்ர சர்யஸௌகப்ரதமாகிறதுவென்றபடி.

இவர் தனியன். (௧) "ஜ்ஞாநாங்கூரகுலதிலக்கிரிமிளாத்ப்ராப் தாபதம்ப்ரேஷித: ஸ்ரீராமாவரஜேநகோஸலபதிர்த்ருஷ்ட்வாததீயாம்ஸ் திதிம் - ஸம்ப்ராப்தஸ்த்வரயாபுராந்தகபுராத்கல்யாணவாபீதடேயோ ஸௌமாருதிரித்யஸௌ ஸதவயத்தஸ்மைநமஸ்குர்மஹே."

மருதூர்நம்பி தம்முடைய அந்திமதசையிற் பணித்தவார்த்தை:- 'மூன்று ஜந்மம் தம் திருவடிகளிலே அபராதம்பண்ணின சிசுபாலன் திருவடிகளை யடைந்தான். அநந்த ஜந்மம் திருவடிகளிலே அபராதம் பண்ணின நான் இழந்திருக்கை வழக்கோ?' என்ன, இவர் அன்றே திருவடிகளைத் தந்தருளினார்; அதாவது—இத்தலையில் அபராதமே அவன் அங்கீகாரத்திற்குப் பச்சையென்று உணர்கை சாயஜ்ஞாநபரி பாகமென்றபடி.

பிள்ளையுறங்காவில்லிதாஸர் தம்முடைய அந்திமதசையிலே முதலிகளெல்லாரையும் அழைப்பித்துத் தீர்த்தங்கொண்டு க்ஷமை கொண்டு, பொன்னாச்சியாரைப் பார்த்து 'நம்முடைய விச்லேஷத்தில் நீ பிழைகினையாதே கொள்' என்று ஆணையிட்டு, உடையவர் திருவடிநிலைகளைத் தம்முடியிலே வைத்துக்கொண்டு திருநாட்டுக்கு எழுந்தருளினார். அநந்தரம் பொன்னாச்சியாரும் க்லேசியாமல்தரித்திருந்து திருவாசலைத்திருவலகிட்டுத் தெளிநீர் தெளித்துத் திருப்

(௧) ஜ்ஞாநாங்கூரகுலதிலக்கிரிமிளாத்ப்ராப்தாபதம்ப்ரேஷித: ஸ்ரீராமாவரஜேநகோஸலபதிர்த்ருஷ்ட்வாததீயாம்ஸ்திதிம் । ஸம்ப்ராப்தஸ்த்வரயாபுராந்தகபுராத்கல்யாணவாபீதடே யோஸௌமாருதிரித்யஸௌஸதவயத்தஸ்மைநமஸ்குர்மஹே ॥

பிண்டியிட்டுத் திருக்காவணமிடுவித்து நிற்க, ஸ்ரீவைஷ்ணவர்கள் உடையவர் நீராடும் துறையிலே திருமஞ்சனமெடுத்துக்கொண்டுவந்து த்வயாநுஸந்தாநத்துடனே நீராட்டித் திருநாமம் திருச்சூர்ணம் முதலாக ஸ்ரீவைஷ்ணவாலங்காரங்களெல்லாஞ் செய்து பெருமாள் சாத்திக் களைந்து வரவிட்டருளின திருமாலையும் திருப்பரிவட்டமும் சாத்தி அலங்கரிக்க, தாமும் ஸர்வாபரண பூஷிதையாய்க் கஸ்தூரிம்ருகம் போலே உலாவிநின்று ஸ்ரீவைஷ்ணவர்களைத் தீர்த்தங்கொண்டு சருளாமுது திருத்தித் திருமாளிகையிலுள்ள த்ரவ்யங்களடங்கலும் ஸமர்ப்பிக்க, கரும்புகளுமெடுத்து நூற்றந்தாதி இயலாக அநுஸந்தித்துவரப் பின்பு திருச்சூர்ணமிடித்து எல்லாரும் * எண்ணெய் சுண்ணம் கொண்டாடி, பிள்ளையுறங்காவில்லிதாஸருடைய விமலசரம விக்ரஹத்தைத் திவ்ய விமாநத்திலே எழுந்தருளப் பண்ணி வைத்துக்கொண்டு ஏகாங்கிகளும் ஸ்ரீவைஷ்ணவர்களும் மற்றுமுள்ள முதலிகளும் மாறி மாறி ஸ்ரீபாதந்தாங்க, எழுந்தருளுகிற விமாநமும் தூரமறைந்தவளவிலே, பொன்னாச்சியாரும் சோகாக்ராந்தையாய் "மாரிமாக்கடல்வளை வணர்க்கிளையவன் வரைபுரை திருமார்பில், தாரினாசையில் போயின நெஞ்சமும் தாழ்ந்தது ஓர் துணை காணேன், ஊரும் துஞ்சிற்று உலகமும் துயின்றது ஒளியவன் விசும்பியங்கும், தேரும் போயிற்றுத் திசைகளும் மறைந்தன செய்வதொன்றறியேனே" என்று கையெடுத்துக் கூப்பிட்டு அழுதுகொண்டு விழுந்து பாகவதவிப்லேஷாஸஹிஷ்ணுவாய் மூர்ச்சித்துக்கிடந்து அப்போதே அங்கே திருநாட்டுக்கு எழுந்தருள, முதலிகளும் அங்கே அவருக்குத் திருச்சூர்ணமிடித்துப் பிள்ளையுறங்காவில்லிதாஸருடன் திருப்பள்ளிபடுத்தார்களென்பர்கள். இவருக்குத் ததீயவிப்லேஷத்தில் அப்போதே ஸரீரவிப்லேஷம் வரும்படியான ததீயப்ரேமசாமபாகம் முற்றிவளர்ந்தபடியிறே இது.

இவர் தனியன்-(க) "ஜாமாத்ருகத்ருஷ்டபாணிம் பாணௌகட்கணாமர்திதம்-ரமாநுஜஸ்பர்ஸவேதிம்ராத்தாந்தார்த்தப்ரகாஸகம்-பாஷிதேயத்வயயுகம் பாஷ்யகாரபரம்வஹம் - ஸங்கேஸமங்களாகாந் தநூர்த்தாஸ மஹம்பஜே."

---

(க) ஜாமாத்ருக த்ருஷ்டபாணிம் பாணௌ கட்கணமர்திதம் । ராமாநுஜஸ்பர்ஸவேதிம் ராத்தாந்தார்த்தப்ரகாஸகம் ॥ பாஷிதேயத்வயயுகம் பாஷ்யகாரபரம்வஹம் । ஸங்கேஸமங்களாகாந் தநூர்த்தாஸமஹம்பஜே ॥

நம்பிதிருவழுதிவளநாடுதாஸர் திருநாட்டுக்கெழுந்தருளுகிற ஸமயத்திலே தம்ஸ்ரீபாதத்திலே ஸேவித்திருந்த ஒரு ஸ்ரீவைஷ்ணவர் அழ, அதற்குநம்பி 'கெடுவாய்! செத்துப்போகிற நான் போகாநின்றேன்; ஸ்ரீபராஸரபட்டர் வாசிக்கக் கேட்கவிருக்கிற நீயோ அழுகிறாய்!' என்று அருளிச்செய்தாரிறே; அதாவது - ஸதாசார்யவ்யாக்யாநவசநஸ்வாரஸ்யாஸக்தி அபவர்க்கபலப்ராப்தியிலும் அருசிபிறப்பிக்குமென்றபடி.

பிள்ளைதிருவழுதிவளநாட்டரையர் தம் அந்திமதசையிலே க்லேஶிக்க, சுற்றிலுமிருந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் அந்யோந்யம் முகம்பார்த்திருக்க, அவரும் இவர்களுடைய அபிப்ராயத்தைத் தம்திருவுள்ளத்திலே கோலியருளி 'வாரீர்காள் முதலிகாள்! ஸம்ஸாரிகளிழவுக்குப் போரநொந்தோங்காணுங்கோள்; அவர்களுக்கும் நமக்கும் அல்பமாய்த்து வாசியுள்ளது; எங்ஙனேயென்னில்:—நாம் இடுவது ஒருதண்டம், பண்ணுவது ஒருப்ரபத்தி, இழப்பது ஒரு ஹேயமான ஸம்ஸாரம், பெறுவது ஒருவிலக்ஷணமான பரமபதம்; இத்தையறியாதே அதுப்பதிக்கிறார்களோ! என்று க்லேஶமாய்த்துக்காணுங்கோள்' என்ன, முதலிகளும் க்ருதார்த்தரானார்கள்; அதாவது - பரதுக்காஸஹிஷ்ணுத்வமும், பரஸம்ருத்த்யேகப்ரயோஜநத்வமும் ஸ்ரீவைஷ்ணவனுக்கு உண்டாகவேணுமென்று கருத்து.

---

## எம்பார் வைபவம்.

---

எம்பார், உடையவர் திருநாட்டுக்கெழுந்தருளும்போது அவர் திருவடிகளைப் பிடித்துக்கொண்டு 'நாயந்தே! பெரியதிருமலைநம்பி, ஶுக்திகையிலே ரஜதபுத்திபண்ணுவாரைப்போலே அபரமாத்மவிஷயே பரமாத்மபுத்திபண்ணி விடாநின்ற அஜ்ஞாநநிஷ்டனாய்க் காளஹஸ்தியாகிறகடுங்காட்டிலே யிருந்த என்னைப் *போதரேயென்றுசொல்லிப் புத்தியில்புகுந்து தன்பாலாதரம்பெருகும்படி திருத்தி *மாயப்பற்றறுத்து, அடியேனுடைய துர்வாஸநாச்சேதநத்தைப் பண்ணியருளி, *பொருளல்லாத என்னைப் பொருளாக்கி அடிமைகொண்டருளி, "தாயாய்த் தந்தையாய் மக்களாய் மற்றுமாய் முற்றுமாய்" என்கிறபடியே ஸர்வவிதபந்துவும் த்ருஷ்டாத்ருஷ்டங்களிரண்டுமே தேவரீர் திருவடிக

ளென்றுகாட்டிக்கொடுத்தருளினார்; தேவரீரும் அப்படியே அடியேன் நம்பி திருவடிகளை யகன்ற இழவெல்லாம் தீர ஸர்வவிதோத்தாரகபந்துவுமாய் நிற்க, தேவரீர் திருவடிகளே ப்ராப்யமும் ப்ராபகமு மென்று அத்யவஸித்திருந்த அடியேன் (க) "நசஸீதா த்வயாஹீநா நசாஹமபி ராகவ-முஹூர்த்தமபி ஜீவாவோ ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ" என்கிறபடியே என்னுயிர் நிலையான தேவரீர் திருவடிகளை அகன்று ஒரு க்ஷணமாத்ரமும் தரிக்கமாட்டேன்; தேஹி விட்டுப்போனால் தேஹம் நிற்குமோ? "நிழலும் அடிதாறும் ஆனோம்" என்கிறபடியே ஸ்ரீபாதச் சாயாபந்நனான அடியேன் எங்ஙனே தரித்திருப்பேன்?' என்று திருவடிகளிலே பேரார்த்தியோடே விழுந்து எழுந்திராமல் கிடக்க, உடையவரும் எம்பாரைக் குளிர நோக்கியருளி 'நாம் நம்பி திருக்கையாலே உம்மை உதகபூர்வகமாகப் பரிக்ரஹித்தபின்பு நமக்கும் உம்மைப் பிரியக்கூடுமோ? நம்முடைய வைகுண்டநாதனும் அப்படியே செய்தருளுகிறான்; பதறாதேகொள்ளும்' என்று எம்பாரைவாரியெடுத்து அணைத்துக்கொண்டு, தம் *பொன்னங்கழற்றாமரைப்பூக்களாலே அவர் திருமுடியை அலங்கரித்தருளித் திருநாட்டுக்கு எழுந்தருள, எம்பாரும் தாயைப்பிரிந்த ஸ்தநந்தயப்ரஜையைப்போலே மிதிலாக்ரோசனராய்ப் பெரிய ஆர்த்தியோடே உடையவர் ப்ரஸாதித்தருளின அர்த்தவிசேஷங்களைப் பட்டர் முதலான முதலிகளுக்கு ப்ரஸாதித்துக்கொண்டு எழுந்தருளியிரா நிற்க;

ஒருநாளாக உடையவர் திருவடிகளைத் திருவுள்ளத்தே *நினைந்து நைந்து உள்கரைந்துருகி, *நாய்நாடுகின்றேன்போல் 'எப்போது காணப்பெறுவேன்?' என்று த்வரைவிஞ்சி, ஆசார்யவிஸ்லேஷம் பொறுக்கமாட்டாமல் "அவனைவிட்டகன்று உயிராற்றகில்லா" என்கிறபடியே உடையவரையகன்று இருக்கமாட்டாத ஆற்றாமை கரைபுரண்டு மிகவும்விஞ்சி, பெரியபெருமாள் ஸந்நிதியிற்சென்று 'நாயந்தே! அடியேன் உடையவர் திருவடிகளேறப்போக நினையாநின்றேன்; தேவரீர் விடை ப்ரஸாதித்தருளவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் 'அப்படியேசெய்யும்' என்று திருவுள்ளம்பற்றியருளி, எம்பாருக்குத்

---

(க) நசஸீதா த்வயாஹீநா நசாஹமபி ராகவ । முஹூர்த்தமபி ஜீவாவோ ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ ॥

தீர்த்தப்ரஸாதமும் ஸ்ரீசடகோபனும் இரங்கிப்ரஸாதித்தருள, இவரும் "திருப்பொலிந்தசேவடி என்சென்னியின்மேற் பொறித்தாய்" என்று அங்கீகரித்தருளி, அமலனாதிபிரானிற்படியே பாதாதிகேசாந்தமாக அநுபவித்தருளி, "என்னமுதினைக், கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்றுகொண்டு * அணிபார்பொழில்சூழரங்கநகரப்பனைத் தம் * நன்னூர்களும் நெஞ்சுள்ளும் நீங்காதபடியாக நிறைத்துக்கொண்டு புறப்பட்டருளி உடையவர்மடத்தேற எழுந்தருளி, (க) "யோநித்யம்" என்றுதொடங்கி (உ) "ராமாநுஜஸ்யசரணௌ சரணம்ப்ரபத்யே" என்று அநுஸந்தித்துக்கொண்டு தண்டன்ஸமர்ப்பித்து, மடமேயெழுந்தருளித் தம் திருவாராதநமான அரங்கநகரப்பனைத்திருவடிவிளக்கிப் பட்டரையழைத்தருளி 'வாரீர் பட்டரே! நாம் ஆழ்வான்குமாரர்; அகிலசாஸ்த்ரங்களையும் அதிகரித்தோராய்; நம்பெருமாள் நம்மைப்புத்ரஸ்வீகாரம்பண்ணியருளினாரென்றும் மேன்மைகளை நினைத்து இருமாந்திராதே, நம்மானை! 'எம்பெருமானார் திருவடிகளே உபாயோபேயம்' என்று அத்யவஸித்திரும்' என்றும் அருளிச்செய்து, * கணியனூர்ச்சிறியாச்சான் சட்டம்பள்ளிச்சீயர் நச்சம்பாடிச்சீயர்முதலானோர்க்கும் மற்றுமுள்ளமுதலிகளுக்கும் உடையவர் ப்ரஸாதித்தருளின அர்த்தவிசேஷங்களையும் ப்ரஸாதித்துக்கொண்டு தர்சநம் நிர்வஹித்து வாழ்ந்தருளவேணும்' என்று மங்களாசாஸநம் செய்தருளி, அவர்களைப் பட்டர்திருக்கையிலே காட்டிக்கொடுத்தருளி, 'ஸர்வாபராதங்களையும் பொறுத்தருளவேணும்' என்று தண்டன்ஸமர்ப்பித்து, பட்டர்முதலான முதலிகளைத் தீர்த்தங்கொண்டு அமுதுசெய்யப்பண்ணி, * அரங்கத்துறையும் இன்துணைவனே வழித்துணையாக நினைத்துக்கொண்டு உடையவர் திருவடிகளை த்யாநித்துக்கொண்டு திருநாட்டுக்கு எழுந்தருளினார்.

பட்டரும் ஆசார்யவிஸ்லேஷம் பொறுக்கமாட்டாமல் மிகவும் சோகார்த்தராய்க் க்லேசிக்க, அருகிருந்த முதலிகளும் 'வாரீர் பட்டரே! தேவரீர் இப்படி க்லேசிக்கலாமோ?' என்று தேற்றவிட, பட்டரும் தம்மிலே தெளிந்துகொண்டிருக்கிறவளவிலே, பெருமாள் சாத்திக்களைந்த திருமாலை திருப்பரியட்டம் முதலானவற்றையும் கொண்டு

(க) 𑌯𑍋𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 (உ) 𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌸𑍍𑌯𑌚𑌰𑌣𑍌 𑌶𑌰𑌣𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇 ॥

ஆழ்வார்களுக்கும் உடையவருக்கும் தீர்த்தவிஸம் † சொல்லா தொழிவானென்னென்னில்: — அத்யாபி அகிலாத்மோத்தாரணார்த்தமாக அர்ச்சாவிக்ரஹங்களை அங்கீகரித்து இங்கே எழுந்தருளியிருக்கிறார்களாகையாலே அன்றிக்கே, அவர்கள் இங்கிருந்துங்கால்வாங்கிப்போகில் ஆத்மகோடிகளுக்குக் கரையேற வழியில்லையிறே. இத்தை நினைத்திறே, நம்பூர்வாசார்யர்கள் தீர்த்தங் கொண்டாடித் திதிபரிபாலனம்பண்ணுதொழிகிறதும். (க) "ஆர்த்ராயாமுதிதோ மஹாபுரிபூதோ ஹாரீதவம்சாத்ரிமாத்காப்ஸமம் ஸ்ரீரங்கஸ்ரீயமாத்யஸிஷ்யமஹிதோ வேதாந்த பாஷ்யம்வ்யதாத் தீப்ரோ திக்விஜயம் விதாய ஸஹஸைர் தர்ஸிதைர் திவ்யஞ்சாமுனைதர்பா திஸ்ரீயஸபூதோ யதிவரஸ் ஸம்பத்குமாரம்பஜந்" என்று சித்திரையிற் செய்ய திருவாதிரையிலே ஸ்ரீபெரும்பூதூரிலே அகிலாத்மோத்தாரணார்த்தமாகவந்து அவதரித்து அகிலஸாஸ்த்ரங்களையும் அப்யஸித்து, பெருமாள் கோயிலிலே பேரருளாளர் நியமத்தாலே பெரிய நம்பியை ஆஸ்ரயித்துப் பஞ்சஸம்ஸ்காரங்களையும்பெற்று "மற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர் தோள்கைவிட்டு" என்கிறபடியே ஸர்வஸங்கபரித்யாக பூர்வகமாகப் பேரருளாளர் ஸந்நிதியிலே ஆஸ்ரமப்ராப்தி பண்ணியருளி, ஸ்ரீரங்கைஸ்வர்யத்தைப் பெற்று, ஸ்ரீபாஷ்யமருளிச்செய்து திக்விஜயம்பண்ணித் திருவரங்கர் பரத்வத்தை நிலைநிறுத்தியருளி, புழுவன் வ்யாஜேந மேல்நாட்டுக்கு எழுந்தருளித் திருநாராயணற்கு அணித்தமுதுங் கண்டருளப்பண்ணிச் செல்வப்பிள்ளையைப் பெற்றெடுத்துவந்து ப்ரதிஷ்டிப்பித்தருளி ஐம்பத்திருவர்க்காக அர்ச்சாவதார ரூபவிக்ரஹத்தை அங்கீகரித்து, அதிலேதம்ஸாந்நித்யத்தையும் ப்ரதிஷ்டிப்பித்துக்கொண்டு அவர்களாலே ஸேவ்யமானராய்ச் * செம்பொற் கழலடித் திருவருச்செல்வப்பிள்ளையை மங்களாஸாஸனஞ்செய்து கொண்டு காலதத்வமுள்ளதனையும் இங்கே ஸுப்ரதிஷ்டிதராய் விளங்காநின்றுகொண்டு வாழ்ந்தருளுகிறாராய்த்து, உடையவர்.

---

(க) [illegible]

'† சொல்லாதொழிவான்' என்பதற்கு ஸ்ரீவைஷ்ணவர்கள் பரிபாலித்து ப்ராவித்தப்[illegible]த்தாயிருப்பது என்று பொருள்.

# பட்டர் வைபவம்.

அநந்தரம் பட்டர் ஸ்ரீபாதத்துமுதலிகளுடனே பெருங்கூட்டத் திருவோலக்கமாக எழுந்தருளியிருந்து தர்மஸகம் நிர்வஹித்தருளுகிற காலத்திலே, ஒருதீர்த்தவாஸிப்ராஹ்மணன்வந்து பட்டரை ஸேவித்து அவருடைய வேதாந்தோபந்யாஸ சாதுர்யத்தையும் கோஷ்டியின் வைபவத்தையுங் கண்டு நின்று 'பட்டரே! மேல்நாட்டில் வேதாந்தி யென்று ஒரு பெரிய வித்வானிருக்கிறான்; அவனுடைய வித்யையும் கோஷ்டியும்போலே உமக்கு மிருந்தது'என்ன, பட்டரும் ப்ராஹ்மணன் சொன்ன வார்த்தையைக் கேட்டருளி 'ஆமோ! அப்படியும் ஒருவித்வா னுண்டோ?' என்ன, 'உண்டு' என்று சொல்லி அந்த ப்ராஹ்மணன் இங்கு நின்றும் புறப்பட்டு மேல்நாட்டுக்குப் போய் வேதாந்தி கோஷ்டியிலேசென்று 'வேதாந்திகளே! உம்முடைய வித்யைக்கும் கோஷ்டிக்கும் ஸத்ருமாராய்ப் பட்டரென்பாரொரு வர் இரண்டாற்றுக்கும் நடுவே எழுந்தருளியிருக்கிறார்' என்ன, வேதாந்திகளும் ப்ராஹ்மணனைப்பார்த்து 'ஆமோ! பட்டர் நமக்கு ஒத்த வித்வானோ?'என்ன, அவனும் 'பட்டர் உம்மிலும்அதிகர்'என்ன, அவனும், அவருக்கு எந்தஶாஸ்த்ரம் போரும்?' என்ன, ப்ராஹ்மண னும் 'ஶப்த தர்க்க பூர்வோத்தரமீமாம்ஸை தொடக்கமான ஸகல ஶாஸ்த்ரங்களும் பட்டருக்குப் போரும்' என்ன,வேதாந்தியும் இவன் சொன்னதைக்கேட்டு 'இவ்விபூதியிலே நமக்கு ஒருவரும் எதிரில்லை யென்று ஷட்தர்ஶநத்திற்கும் ஆஸநமிட்டு அதன்மேலே உயர விருந்தோம்; பட்டர் நம்மிலும் அதிகரென்று ப்ராஹ்மணன் சொன் னானே!' என்று அன்றுதொடங்கித் திடுக்கிட்டிருந்தான்.

அவ்வளவிலே அந்தப்ராஹ்மணன் அங்குநின்றும் புறப்பட்டுக் கோயிலுக்குவந்து பட்டர்ஸந்நிதியிலே வந்து 'பட்டரே! உம்முடைய வைபவமெல்லாம் வேதாந்திக்குச் சொன்னேன்' என்ன, பட்டரும் ப்ராஹ்மணனைக்குறித்து'அவன் அதுக்கு என்னசொன்னான்?' என்ன, அவனும் 'பட்டருக்கு எந்தஶாஸ்த்ரம் போருமென்று கேட்டான்' என்ன, பட்டரும் 'ப்ராஹ்மணா! அதுக்கு நீ வேதாந்திகளுக்கு என்ன சொன்னாய்?' என்ன, அவனும் 'பட்டருக்கு ஶப்ததர்க்கங்களும் பூர் வோத்தரமீமாம்ஸைகளும் நன்றாகப்போருமென்று வேதாந்தியுடனே

றில்லாமாருதியாண்டான் விண்ணப்பஞ்செய்யக் கேட்டுப் பெரியப்ரீதி யோடே *செங்கோலுடைய திருவரங்கச் செல்வனுரான பெரியபெருமாளே மங்களாஸாஸனம்பண்ணுவதாகக் கோயிற் கோயிலுக்கு எழுந்தருளும்போது தாமே ஐம்பத்திருவரைச் * செயல்நன்றாகத் திருத்தித் தத்விஷயத்திலே பரிவராயிருக்கும்படி நியமிக்கைக்கும், கரைகட்டாக் காவிரிபோலே கரைபுரண்டு ஆஸ்ரயித்தளவன்றிக்கே யிருக்கைக்கும் உடலாயிருக்கையாலே விஸ்ருதமங்களாயிருக்கும். ஸ்ரீமந்நாதமுநிகளுடையவும் ஆளவந்தாருடையவும் ஜ்ஞாநபக்திகள் - இவ்வன் விஸ்ருங்கலமாய்க் கரைபுரண்டிராதே அளவுபட்டு அரையாறுபட்டுத் தந்தாமை ஆஸ்ரயித்தவரளவிலே தானே அடங்கி ஒன்றிரண்டு ப்ரபந்தங்களை இட்டருளுகைக்கு உடலாயிருக்கையாலே, விஸ்ருதங்களாயிருக்கும். உய்யக்கொண்டாருடையவும் மணக்கால் நம்பியுடையவும் பெரியநம்பியுடையவும் ஜ்ஞாநபக்திகள் - கீழ்ச் சொன்னபடியிராதே சிறியாறுபட்டுப் பரிமிதங்களாயிருக்கையாலே, விஸ்ருதங்களாயிருக்கும்.

இப்பதின்மூன்றுவாக்யங்களிலும் முந்தினவாக்யங்கள்மூன்றும், வேதமாகிற மந்த்ரரூபரிக்ருஹீதங்களாயிருக்கும்; மற்றைவாக்யங்கள்பத்தும், ஆசார்யரூபபரிக்ருஹீதங்களாயிருக்கும்.

அபௌருஷேயமாயும் பௌருஷேயமாயுமிருக்கிற ரஹஸ்யத்ரயத்துக்கு ஏகவாக்யத்வஞ்சொன்னவோபாதி, இப்படி அபௌருஷேயமாயும் பௌருஷேயமாயுமிருந்துள்ள இப்பதின்மூன்றுவாக்யத்துக்கும் ஏகவாக்யத்வம் சொல்லத் தட்டில்லை. அப்படியே (க) "நமோருஷிப்ய:" என்று அபௌருஷேயமானுப்போலே நமஸ்ஸப்தம் முன்னாக இவ்வாக்யத்ரயத்தையும் நிர்த்தேஸியாதே அஸ்மத்ஸப்தம்முன்னாக நிர்த்தேஸித்தது, (உ) "அகிலபுவந" என்கிற இடத்தில் மாங்களிகமான அகாரத்தைப்போலே மாங்களிகமான அகார உபக்ரமவித்யர்த்தமாக. அப்படி முந்தினவாக்யத்தை அகாரோபக்ரமவித்யர்த்தமாக அஸ்மத்ஸப்தத்தை முன்னிட்டு நிர்த்தேஸித்தவோபாதி, மற்றையிரண்டுவாக்யங்களையும் அஸ்மத்ஸப்தத்தைத்தானே முன்னிட்டுநிர்த்

(க) [illegible] ॥ (உ) [illegible] ॥

தேஶித்தது, (க) "ஶந்நோமித்ரஶ்ஶம்வருண:, ஶந்நோபவத்வர்யமா" என்னுமாபோலே.

த்ரயோதஶவாக்யாத்மகமான இக்குருபரம்பராரூபமந்த்ரந்தான், ஸ்ரீஸஹஸ்ராக்ஷமமாலாமந்த்ரம்போலே அநேகஶம்ஶப்தஶரீரகமாய், த்வாரஶேஷிகளுக்கும் ப்ரதாநஶேஷிகளுக்கும் அடைவே ப்ரதிபாதகமாய், ப்ரதமமத்யமசரமாவதிரூபமான பர்வத்ரயப்ரகாஶகமாய், உபதேஷ்ட்ரு உபதேஶ உபதேஶ்ய ரூபமூன்றுவர்க்கத்துக்கும் ஸாம்ப்ரதாயிகத்வ ஸாத்குண்ய யோக்யதைகளுக்கும் ஸம்பாதகமாய், 'வக்தவ்யம் குருபரம்பரையும் த்வயமும்' என்கையாலே த்வயத்தோபாதி ஸதாநுஸந்தேயமாய், தன்னைமுன்னிட்டு ரஹஸ்யத்ரயத்தை அநுஸந்திப்பாரை "நாவகாரியஞ்சொல்லிலாதவர்" என்று * மயர்வறமதிநலமருளப்பெற்றவர் கொண்டாடும்படி பண்ணக்கடவதாய், "அஸ்மத்" என்று அகாராதியாக உபக்ராந்தமாய், அப்படியே ஸ்ரீஶம்ஶப்தங்களைப் பல விடங்களிலும் இடையிலேயுடைத்தாய், "ஸ்ரீதராய நம:" என்றுமாங்களிகமான ஶம்ஶப்தத்தோடே நிகமிக்கப்பட்டதாயிருக்கையாலே, கார்த்ஸ்ந்யேந மங்களாத்மகமாயிருக்கும்.

குருபரம்பராவிவரணம் ஸம்பூர்ணம்.

---

(க) ஶந்நோ மித்ரஶ்ஶம் வருண:, ஶந்நோ பவத்வர்யமா ॥

கோபில்பிரஸ், திருவல்லிக்கேணி, சென்னை.